# கல்கி

KALKI 28.4.96 ரூ. 3.00

ஜெ'யின் கோடிகள்...



சிதம்பரத்தின் கேள்விகள்!

# பொன் விளையும் பூமி

## கூடுவாஞ்சேரி:

***அவ்வை நகர் (1121/95)***

***ராஜாஜி நகர் (532/95)***



ஃபோர்டு கார்
தொழிற்சாலை அருகே

வேகமாக வளர்ச்சியடைந்து வரும் கூடுவாஞ்சேரியில் மதிப்பு வாய்ந்த வீட்டு மனைகளை உங்களுக்கு வழங்குகிறது டிஎல்வி. இந்நிறுவனம், இருபது ஆண்டுகளுக்கு மேலாக பல்வேறு துறைகளில் தன் பெயரை நிலை நாட்டியுள்ளது.

மனைகளுக்கான பணம் செலுத்தும் போது வியப்பூட்டும் தள்ளுபடிகள் மற்றும் தங்கப் பரிசுகள் பெறலாம்.

15 தினங்களுக்குள் முழுத் தொகை -
11% தள்ளுபடி + 3 கிராம் தங்ககாசு.
30 தினங்களுக்குள் முழுத்தொகை -
10% தள்ளுபடி + 2 கிராம் தங்ககாசு
60 தினங்களுக்குள் முழுத்தொகை -
5% தள்ளுபடி + 1 கிராம் தங்ககாசு

180 தினங்களுக்குள் முழுத் தொகை - 25% மனைத் தொகை இரண்டு மாதங்களில். மீதி வட்டி இல்லாத தவணைகள்.

இலவசம். மனைக்கு செல்ல வாகன வசதி - காலை 6, 11 மணி. மாலை 3 மணி.

*மேற்கொண்டு விபரமறிய எங்களை அணுகவும் :*




**டிஎல்வி ஹவுஸிங் & ஃபைனான்ஸ் (பி) லிமிடெட்,**

54, பெரம்பூர் பேரக்ஸ் ரோடு, புவனேஸ்வரி தியேட்டர் எதிரில், சென்னை - 600 007.
போன்: 5325311/12/13 ஃபேக்ஸ் : 5325363

***20 ஆண்டுகளுக்கு மேலாக நன்மதிப்பை கட்டிக்காப்பவர்கள்***



• ரவிச்சந்திரன்

சேகரித்துக் கொண்டிருக்கும்- வை.கோ.வின் தம்பி வை. ரவிச் சந்திரன்.

"மக்களின் மனநிலை எப்படி இருக்கிறது?"

"நாங்கள் வீடுவீடாகச் செல்லும்போது, 'ஆமாய்யா... இப்படித்தான் போன தேர்த லிலும் வந்தீங்க. என்ன செஞ்சுட்டீங்க?' என்று கோபமாகக் கேட்கிறார்கள் மக்கள். நாங்கள் அவர்களிடம் 'அது நாங்களல்ல; நாங்கள் வந் தால் அப்படிச் செய்யமாட்டோம். உங்களு டைய குறைகளைத் தீர்ப்பதற்கான எல்லா முயற்சிகளையும் எடுத்துக் கொள்வோம். தமிழ் நாடு முழுவதும் வை.கோ. பிரசாரம் செய்ய



• வை.கோ.

# வை.கோ.வைத் திணறடிக்கும் [illegible].க!

**வி**ளாத்திகுளம்...!

மற்ற கட்சிகளுக்கு எப்படி யிருந்தாலும் ம.தி.மு.க.வைப் பொறுத்த வரை மிகமிக முக்கிய மான தொகுதி. இங்கே வை.கோ. போட்டியிடுகிறாரே!

ஆனாலும், "நான் போட்டியிடு கிறேன் என்பதாலேயே இந்தத் தொகுதிக்கு மட்டும் மிக முக்கியத் துவம் கொடுத்து விடக் கூடாது; மற்ற தொகுதிகளுக்கெல்லாம் எப்படி ம.தி.மு.க. வேட்பாளர்கள் வெறும் 50,000 ரூபாய் மாத்திரமே செலவழிக்கிறார் களோ, அதே போல் தான் என் தொகுதிக் கும் செலவழிக்க வேண்டும். காரணம், நம்முடையது ஆடம்பர அரசியல் அல்ல; எளிமை யான- தூய்மையான அர சியல்!' என்று அண்ணன் ஓர் உத்தரவு மாதிரியே போட்டு விட்டார், எங்களுக்கு. அத னால் வீடு வீடாகச் சென்று வாக்குக் கேட்பதில்தான் தீவிரமாக இறங்கியிருக்கிறோம் நாங்கள்!'' என்கிறார், தமது அண்ணனுக்காக வாக்குச்

வேண்டியிருப்பதால்தான் அவருக்குப் பதிலாக நாங்கள் வந்திருக்கிறோம்!' என்று மக்களிடம் விளக்குகிறோம். அவர்களும் புரிந்து கொள்கிறார்கள். இன்றைய அரசியல் பற்றிய விழிப்புணர்வு மக்களிடம் நிறையவே இருக்கிறது!'' என்கிறார் வை. ரவிச்சந்திரன்.

அவர் சொல்வது போன்ற விழிப்புணர்வு மக்களிடம் இருக்கிறதோ இல்லையோ, நிச்சயமாக தற்போதைய ஆளுங்கட்சி எம்.எல்.ஏ.வாக இருக்கும் கனகவல்லி பற்றி மக்கள் நிறையவே புரிந்து வைத்திருக்கிறார்கள். அவரைப் பற்றிப் பேசினால் அடிவாங்காமல் திரும்ப முடியாது என்கிற நிலை. அந்த அளவுக்குப் புரட்சித் தலைவியின் 'தர்ம' ஆட்சியை நடத்திக் காட்டியிருக்கிறார் கனகவல்லி. ஜெயித்த பிறகு எந்தவிதமான தொகுதிப் பிரச்னைகளையும் கவனிக்கவில்லை என்பதோடு, தொகுதிப் பக்கமே எட்டிப் பார்க்காத எம்.எல்.ஏ. அவர்!


• பெருமாள்

அதனால்தான் இந்தமுறை அவருக்குப் பதிலாக என்.கே. பெருமாள் என்பவருக்கு சீட் கொடுத்திருக்கிறது அ.தி.மு.க. இவர் பற்றியும் ஓகோவென்கிற அபிப்ராயம் யாருக்கும் கிடையாது. இவர் காண்ட்ராக்ட் எடுத்துப் போட்ட ரோடுகளெல்லாம் படுமோசம் என்று பத்திரிகைகளில் செய்தி வெளியானது குறித்து அவரிடமே கேட்டோம்.

''அதெல்லாம் வேண்டாத பத்திரிகையாளர்கள் எழுதுகிற விஷயங்கள். அதையெல்லாம் நீங்கள் நம்பாதீர்கள். வெற்றி எங்களுக்குத்தான்!'' என்றார்.

இவரைப் போல் பொய்யான நம்பிக்கைகளெல்லாம் கிடையாது, பாரதிய ஜனதா கட்சி வேட்பாளரான திருமதி இராஜம்மாளுக்கு. ''நாங்கள் வெற்றி பெறுவோம் என்கிற நம்பிக்கையெல்லாம் கிடையாது. இருப்பினும் ஆரோக்கியமான அரசியல் பற்றிய விழிப்புணர்வை கணிசமான அளவுக்கு எங்களால் உருவாக்க முடியும்!'' என்கிறார், இராஜம்மாளின் மகன் இராமமூர்த்தி.

எதிர்த்து நிற்பது வை.கோ.தான் என்றாலும் தமது வெற்றியில் நம்பிக்கையோடிருப்பவர் தி.மு.க. வேட்பாளரான ரவிசங்கர்தான்! எம்.பி.ஏ. படித்த இந்த இருபத்தேழு வயது இளைஞர், இப்போதுதான் கன்னி முயற்சியாக அரசியல் களத்தில் குதித்திருக்கிறார். அரசியல் புதுசு என்பதால் முகத்தில் இன்னமும் பால் வடிகிறது!

இவருக்காக, ரஜினி ரசிகர் மன்றத்தினரும் காங்கிரஸாரும் தி.மு.க.வோடு சேர்ந்து கொண்டு வீடு வீடாகப் போய் வாக்குக் கேட்கிறார்கள்.

''ஆளுங்கட்சியினர் பணம் கொடுத்து வோட்டு வாங்கலாமென்று நினைத்தாலும் இங்கே அதெல்லாம் நடக்கவே நடக்காது. அவர்களிடம் பணத்தை வாங்கிக் கொண்டு, எங்களுக்குத்தான் வோட்டுப் போடுவார்கள் மக்கள்!'' என்று வைகோ.வின் தம்பி ரவிச்சந்திரனைப் போலவே கூறுகிறார் ரவிசங்கரும்.

நிஜமான போட்டி நடப்பதும் வை.கோ.வுக்கும் ரவிசங்கருக்கும்தான் என்கிற நிலையில், வெற்றி பெறப் போவது யார்? இரண்டு பேருக்குமே தொகுதி மக்களிடம் நல்ல பெயர் தான்...

ஆனால், வை.கோ. சிவகாசி எம்.பி தொகுதியிலும் போட்டியிடுவதால், அவர் ஜெயித்து ஆட்சியா அமைக்கப் போகிறார்? அவர் எம்.பி.யாகப் பார்லிமெண்டுக்குப் போகட்டுமே என்று நினைத்து, இத்தொகுதி மக்கள் ரவிசங்கருக்கே கூட வாக்களிக்கக் கூடும்! அந்த அளவுக்கு, மிகச் சரியான வேட்பாளரைத் தேர்ந்தெடுத்துக் களத்தில் நிறுத்தி, வை.கோ.வைத் திணறடித்துக் கொண்டிருக்கிறது தி.மு.க.!

– பிரின்ஸ்


• ரவிச்சந்திரன்

ஜெ. - ரால் கூட்டணியை ஏற்றுக் கொள்வதற்குக் குமரி அனந்தனுக்கு வேண்டுமானால் ஆயிரம் காரணங்கள் இருக்கலாம். ஆனால் அவர் எம்.பி.யாகப் போட்டியிடும் நாகர்கோயில் தொகுதி மக்களுக்கு ஒரு காரணமும் இல்லை. அவர் பேச்சை எடுத்தாலே 'சே! இப்படியும் ஒரு மனிதரா!' என்று ஆட்டோ டிரைவர்களெல்லாம்கூட முகம் சுளிக்கிறார்கள்.

''ஜெயலலிதாவின் ஊழல் அரசுக்கு எதிராகக் கடைசிவரை குமரி அனந்தனும் இருப்பார் என்கிற நம்பிக்கையில்தான் அன்று காலையில் சத்தியமூர்த்திபவனில் நடந்த கூட்டத்தில் 'குமரி அனந்தன் வாழ்க!' என்று நானும் கோஷம் போட்டேன். மாலையில் அவர் மாறிவிட்டார் என்று தெரிந்ததும் அவரை வாழ்க என்று கோஷம் போட்டதற்காக என் நாக்கையே வெட்டி எறிந்து விடலாமா என்று யோசிக்க ஆரம்பித்துவிட்டேன். அந்த அளவுக்கு அருவருப்பான அரசியல்வாதியாகி விட்டார் குமரி அனந்தன்!'' என்று நம்மிடம் ஆவேசமாகப் பேசினார் டாக்டர்

மோசஸ். தற்போது நாகர்கோயில் தொகுதி எம்.எல்.ஏ.வாக இருக்கும் இவர், மீண்டும் மூப்பனார் காங்கிரஸ் சார்பாகச் சட்டமன்றத்துக்குப் போட்டியிடும் வேட்பாளர்.

நாகர்கோயில் தொகுதியில் என்னதான் நடக்கிறது? ராவ் காங்கிரஸ் சார்பில் குமரி அனந்தன், மூப்பனார் காங்கிரஸ் சார்பில் தற்போதைய எம்.பி.யான டென்னிஸ், வாழப்பாடி காங்கிரஸ் சார்பில் லாரன்ஸ் என்னும் ஓய்வு பெற்ற வங்கி மானேஜர், ம.தி.மு.க. ஆதரவோடு ஜனதாதள வேட்பாளராக இஸ்மாயில், பி.ஜே.பி. வேட்பாளராக பொன். ராதாகிருஷ்ணன் என்று ஐந்து முனைப் போட்டி நடக்கிறது.



* டாக்டர் மோசஸ்



தாங்கள் ஜெயிப்பது உறுதி என்கிற நம்பிக்கையோடு செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள், பாரதீய ஜனதாவினர்.

இருப்பினும் அவர்களின் நம்பிக்கை எந்த அளவுக்கு வெற்றி வாய்ப்பைப் பெற்றுத் தரும் என்பது தெரியவில்லை. ஏனெனில் எதிரில் நிற்கும் மூப்பனார் காங்கிரஸ் வேட்பாளர் டென்னிஸ் அப்படி!

டென்னிஸ் ஏற்கெனவே எம்.பி.யாக இருப்பவர். இப்போது தி.மு.க.வின் ஆதரவோடு, ரஜினி மற்றும் சரத்குமார் ரசிகர் மன்றத்தினரும் சுறுசுறுப்பாகக் களத்தில் இறங்கி வோட்டுச் சேகரிக்க ஆரம்பித்துவிட்டார்கள். இவை எல்லாவற்றுக்கும் மேலாக அனைவரும் போற்றும் நேசமணியின் மருமகன் என்கிற மிகப் பெரிய கூடுதல் பலமும் டென்னிஸுக்கு இருக்கிறது.



* குமரி அனந்தன்

# 'குமரி அனந்தனைத் தோற்கடித்தே தீரவேண்டும்!'

"நாகர்கோயிலைப் பொறுத்தவரை ராவ் காங்கிரஸுக்குத் தொண்டர்களே இல்லை!" என்று வாழப்பாடி காங்கிரஸின் மாநிலப் பொதுச் செயலாளர் மூத்துக்கருப்பன் சொன்னது உண்மைதான் என்று நம்பும்படி இருந்தது, ராவ் காங்கிரஸின் தேர்தல் அலுவலகம். நாம் சென்றபோது அங்கே ஓர் ஈ, காக்கைகூட இல்லை!

ஜனதா தள வேட்பாளர் இஸ்மாயிலுக்கும் வாழப்பாடி காங்கிரஸ் வேட்பாளர் லாரன்ஸுக்கும் இருக்கிற ஆதரவு கூட தற்போது குமரி அனந்தனுக்குக் கிடையாது என்கிற நிலையில், போட்டி நிலவுவது மூப்பனார் காங்கிரஸ் வேட்பாளர் டென்னிஸுக்கும் பி.ஜே.பி. வேட்பாளரான பொன். ராதாகிருஷ்ணனுக்கும்தான்!

இந்த ஐந்து முனைப் போட்டியில்

அதே சமயத்தில், சைக்கிள் சின்னம் என்பது புதிய சின்னம் என்கிற மைனஸ் பாயிண்ட்டும் இருக்கிறது.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. குமரி மாவட்ட மக்கள் படித்தவர்கள். அவர்களிடம் சின்னத்தை வைத்தோ, பணபலம், அதிகார பலம் ஆகியவற்றைக் கொண்டோ ஏமாற்றிவிட முடியாது. யோசித்து வோட்டுப் போடுபவர்கள் எங்கள் மக்கள். அதனால் வெற்றி வாய்ப்பு எங்களுக்குத்தான்!" என்று அடித்துச் சொல்லுகிறார் டாக்டர் மோசஸ்.

நாம் பலரையும் சந்தித்துப் பேசிய வரையில் 'யாருக்கு வோட்டுப் போடுவது? டென்னிஸுக்கா? பொன். ராதாகிருஷ்ணனுக்கா?' என்பதில் வேண்டுமானால் மக்களுக்குச் சிறிது தடுமாற்றம் இருக்கலாம். ஆனால் குமரி அனந்தனைத் தோற்கடித்தே தீரவேண்டும் என்பதில் மிகமிக உறுதியாக இருக்கிறார்கள் அவர்கள்!

- எஸ்.ஐ.



* பொன். ராதாகிருஷ்ணன்



* டென்னிஸ்

# அவசரமாக நடந்த சில நலப் பணிகள்!

"நீங்கள் கூப்பிட்ட குரலுக்கு ஓடிவர, உங்கள் வீட்டுப் பிள்ளையான என்னை, இரட்டை இலைச் சின்னத்தில் வாக்களித்து, மீண்டும் தேர்ந்தெடுக்க வேண்டுகிறேன்...!"

-இதுதான் போக்குவரத்துத் துறை அமைச்சர் செங்கோட்டையன் தமது கோபிசெட்டி பாளையம் தொகுதியில் செய்து கொண்டிருக்கும் தேர்தல் பிரசாரம்.

ஒரு திறந்த ஜீப்பில் நின்றபடி, ஊர் ஊராகச் சென்று பிரசாரம் செய்து கொண்டிருந்த அமைச்சரை, நாமும் சில இடங்களில் பின் தொடர்ந்து சென்றோம். நம்மைப் போலவே ஜீவா போக்குவரத்துக்கழக அதிகாரிகள் சிலர், மக்கள் தொடர்புத்துறை அதிகாரிகள் சிலர் என்று அமைச்சரின் முன்னும் பின்னுமாகச் சென்று கொண்டிருந்தார்கள்!

ஒவ்வொரு குக்கிராமத்துக்கும் கூட சாலை வசதி என்பது எவ்வளவு முக்கியமான விஷயம் என்பதை மற்ற அமைச்சர்கள் எந்த அளவுக்குப் புரிந்து வைத்திருக்கிறார்களோ தெரியாது, செங்கோட்டையன் மிகத் தெளிவாகவே புரிந்து வைத்திருக்கிறார். தொகுதியில் போடப்படும் சாலைகள் அந்த மக்களுக்கு மாத்திரமல்ல; அதிகபட்சம் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை வோட்டுக் கேட்க வந்தாக வேண்டிய கட்டாயத்தில் உள்ள தமக்கும் வசதியாக





* உடனடியாகத் தெருவிளக்கு, டெலிவிஷன்....



இருக்கும் என்பதால்தானோ என்னவோ... தொகுதி முழுவதும் தார்ச்சாலைகளாகவே போட்டிருக்கிறார் அமைச்சர்!

ஹரிஜனக் குடியிருப்புகளுக்குப் பட்டா, குடிநீர் வசதி, டெலிவிஷன் வசதி என்று ஏகப்பட்ட வசதிகளைச் செய்திருக்கிறார். அதுவும் தேர்தல் வரப்போவது தெரிந்ததும் பல இடங்களில் அவசரம் அவசரமாக டெலிவிஷன் பெட்டிகள் வழங்கப்பட்டிருக்கின்றன!

கோசனம் என்னும் ஊரை ஒட்டியுள்ள பருத்திக்காட்டுமேடு என்னுமிடத்திலிருக்கும் ஹரிஜனக் குடியிருப்புகளுக்குச் சில நாட்கள் முன்புதான் தெரு விளக்குகள் போடப்பட்டிருக்கின்றன! டெலிவிஷன் பெட்டியும் வழங்கப்பட்டிருக்கிறது. அவசரமாக வழங்கப்பட்டதால், டெலிவிஷன் பெட்டியை வைப்பதற்குப் பொதுவான ஓர் இடம் கிடைக்காமல் தனிப்பட்ட ஒருவர் வீட்டில் வைக்கப்பட்டிருக்கிறது!

• செங்கோட்டையன்

• வெங்கிடு

அமைச்சருக்கு வரவேற்பு எப்படி? ஹரிஜனக் குடியிருப்புகளுக்குச் செல்லும் போதெல்லாம் ஆண்கள் மேளதாளத்தோடும் பெண்கள் ஆரத்தியெடுத்தும் வரவேற்றதைக் கண்ணாலேயே பார்த்தோம். ஒவ்வோர் ஆரத்தித் தட்டிலும் அமைச்சர் பத்துப் பத்து ரூபாயாகப் போட்டுக் கொண்டே வந்தார். குழந்தைக்குப் பெயர் வைக்கச் சொன்னால் பெயரும் வைத்து, ஐம்பது ரூபாய்த் தாளையும் கொடுத்தார். ஹரிஜனமல்லாத பெண்களின் ஆரத்தி என்றால் நூறு ரூபாய்!

"இதுவொன்றும் தேர்தலுக்காக அமைச்சர் கொடுக்கிற விஷயமல்ல. அவர் தொகுதிக்கு வரும் போதெல்லாம் இப்படித்தான் கொடுப்பார். ஏழை – எளியவர்கள் வீட்டில் ஒரு விசேஷம் என்றால் எப்போதும் அவர் பணம் கொடுத்து உதவுவது வழக்கம்தான்!" என்றார்கள் அமைச்சரை வரவேற்பதற்காக மல்லியம்பாளையத்தில் கூடியிருந்தவர்கள்.

"அமைச்சர் தொகுதிக்கு வரும்போதெல்லாம் விசாரிப்பார். எதிர்க்கட்சிக்காரன் வீட்டில் ஒரு துக்கம் நடந்து விட்டது என்பதையறிந்தாலும்– அவன் எதிர்க்கட்சிக்காரனாயிற்றே என்று யோசிக்காமல், உடனடியாகச் சம்பந்தப்பட்ட வீட்டுக்குச் சென்று துக்கம் விசாரிப்பார். திருமணம் போன்ற விசேஷமானாலும் சரி, அவர்கள் வந்து தம்மை அழைக்கவில்லையே என்று கௌரவம் பார்க்காமல் சென்று வாழ்த்துத் தெரிவிப்பார்!" என்றார்கள் அமைச்சரோடு வந்தவர்கள்.

"எல்லாம் சரி, ஜெயலலிதா அரசு மீது ஏகப்பட்ட ஊழல் குற்றச்சாட்டுகள். அப்படிப்பட்ட ஓர் அமைச்சரவையில்தான் நீங்களும் அங்கம் வகிக்கிறீர்கள். இந்த நிலையில் நீங்கள் வெற்றி பெற முடியும் என்று எப்படி நம்புகிறீர்கள்?" என்று அமைச்சரிடம் நாம் கேட்டோம்.

"எங்கள் புரட்சித் தலைவியின் அரசு மீது

• அமைச்சரின் பிரசாரம்

ஊழல் குற்றச்சாட்டுகளைச் சுமத்துவது யார்? எதிர்க்கட்சிகளும் பத்திரிகைகளும்தாம். பத்திரிகை படிப்பவர்கள்தாம் ஊழலா, இல்லையா என்பது பற்றியெல்லாம் யோசித்துக் குழம்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் சாதாரண ஜனங்களுக்கு எந்தவிதமான குழப்பமும் இல்லை. அடுத்த ஆட்சியும் புரட்சித் தலைவியின் ஆட்சிதான் என்பதில் அவர்கள் மிகவும் தெளிவாகவே இருக்கிறார்கள்!'' என்றார் அமைச்சர்.

இது உண்மைதானா? "இடையிடையே இடை-



• மேளதாளத்தோடு வரவேற்பு....

யாது. கட்சிக்காரர்கள் அல்லாத பொதுமக்கள் தங்கள் மனதுக்குள் இந்த ஊழல் ஆட்சியை அகற்றியே தீருவது என்கிற முடிவுக்கு வந்துவிட்டார்கள். ஆனால் அவர்கள் வெளியில் யாரிடமும் இதுபற்றி விவாதிப்பதில்லை என்பதால் ஆளுங்கட்சிக்காரர்கள் மக்களின் மௌனத்தைத் தங்களுக்குச் சாதகமாகச் சொல்லிக் கொள்கிறார்கள்; அவ்வளவுதான்!'' என்றார் ஜி.பி. வெங்கிடு. செங்கோட்டையனை எதிர்த்துத் தி.மு.க. வேட்பாளராகப் போட்டியிடுபவர் இவர்.



• நடராஜன்

''இருப்பினும் அமைச்சருக்கென்று தொகுதியில் தனிப்பட்ட செல்வாக்கு இருப்பதுபோல் தெரிகிறதே?''

''அந்தச் செல்வாக்கையெல்லாம் அமைச்சர் தமது மகனுக்கு நடத்திய ஆடம்பரக் கல்யாணத்திலும் கல்யாண விருந்திலும் இழந்து விட்டார். ஒரு சில மக்களுக்கு வேண்டுமானால் இது புரியாமல் இருக்கலாம். ஆனால் பெரும்பாலான மக்களுக்கு அமைச்சர் எப்படிப்பட்ட வசதியுள்ளவர் என்பது தெரியும். அப்படிப்பட்டவர் இப்படியோர் ஆடம்பர விருந்து தருகிறார் என்றால் அது எப்படி என்பதும் புரியும்!'' என்றவர், ''அ.தி.மு.க.வினரின் அராஜகத்துக்குப் பலியானவர்களில் ஒருவர்தான் இந்த இளைஞர். பெயர் நடராஜன். நீங்களே விசாரித்துப் பாருங்கள்!'' என்று ஒரு வாலிபரை அறிமுகப்படுத்தினார்.

''என்னாயிற்று உங்களுக்கு?''

''தாளக்கொம்புபுதூர் அ.தி.மு.க. கிளைச் செயலாளராக இருந்தேன். கூடவே ரஜினியின் மேல் கொண்ட ஈடுபாடு காரணமாக ரஜினி ரசிகர் மன்றத்திலும் இருந்தேன். நான் ரஜினிக்கு ஆதரவு தருகிறேன் என்பது தெரிந்த உடனேயே நான் சாராயம் காய்ச்சியதாகப் பொய் வழக்குப் போட்டு என்னைப் பதினைந்து நாள் ரிமாண்டில் வைத்து விட்டார்கள். இப்படியும் ஒரு கட்சியா என்று இப்போது நான் தி.மு.க. வேட்பாளருக்காக ரஜினி ரசிகர் மன்றத்தினரோடு தேர்தல் வேலைகள் செய்து கொண்டிருக்கிறேன்!'' என்றார் நடராஜன்.

கோபிசெட்டிபாளையம் தொகுதியில் ம.தி.மு.க. வேட்பாளர் இரா. காளத்திநாதன் என்பவரும் களத்தில் இருக்கிறார் என்றாலும் போட்டியென்னவோ, அமைச்சர் செங்கோட்டையனுக்கும் தி.மு.க. வேட்பாளர் வெங்கிடுவுக்கும்தான்.

அமைச்சர் கடந்த நான்கு முறையும் எம்.எல்.ஏ.வாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு இப்போது ஐந்தாவது முறையாகப் போட்டியிடுபவர். வெங்கிடு, கடந்த 67-லும் 71-லும் போட்டியிட்டுத் தோற்ற பிறகு, இப்போது மீண்டும் களத்தில் குதித்திருக்கிறார்.

ஒருபுறம் படாடோபமான அமைச்சரின் பணபளப்பான பிரசாரம். மறுபுறம், நிஜமாகவே அப்பாவியாய்த் தோற்றம் தரும் வெங்கிடு. இருப்பினும் இந்த அப்பாவியைத் தோற்கடிப்பது அத்தனை சுலபமல்ல என்பதை ஆளுங்கட்சியினர் புரிந்துதான் இருக்கிறார்கள். பொதுமக்களோ மௌன சாட்சியாய்ப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

— இளங்கோவன்

இந்த இதழில் வெளியாகியுள்ள தொகுதி நிலவரம் பற்றிய கட்டுரைகளுக்கான படங்களை எடுத்தவர் : கிருஷ்ணமூர்த்தி

# நடராஜ் எஸ்டேட்ஸ்



வழங்கும்,

## ஈடு இணையற்ற லாபகர திட்டம்

## வாரம் தோறும் காய்கறிகள்

### இல்லத்தரசிகளே !

**உங்கள் வீடு தேடி வருகிறது எங்கள் பண்ணையில் விளையும் காய்கறிகள்**

*(சென்னை நகர வாசிகளுக்கு மட்டும்)*

Ariya Perumpakkam Village,
(Survey No : 444/1 to 461/3D)




- ரூ. 5,000 செலுத்தி 3 வருடங்களுக்கு "மெம்பர்" ஆக வேண்டும்.
- 3 வருடங்களுக்குப் பிறகு "ரூ. 5000-ஐ" திரும்ப பெற்றுக் கொள்ளலாம்.
- அல்லது மேலும் 3 வருடங்களுக்கு "ரினிவல்" செய்து கொள்ளலாம்..
- உங்கள் மெம்பர்ஷிப் கட்டணத்துக்கு 12% வட்டியும் உண்டு.
- சப்ளை செய்யப்படும் காய்கறிகளுக்காக நீங்கள் தனியே பணம் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை.
- மெம்பர் ஆன தேதியிலிருந்து வாரா வாரம் கணிசமான அளவு காய்கறிகள் தொடர்ந்து சப்ளை செய்யப்படும்.

**மெம்பர்ஷிப் கட்டணத்தை நேரிலோ, "செக்" மூலமாகவோ, டி.டி. ஆகவோ அளிக்கலாம்.**

**இலவசம்**
உறுப்பினர் கார்டு, மற்றும் காய்கறி நறுக்கும் S.S. கட்டர்.

**ஞாயிறு தோறும்**
பசுமை நிறைந்த காய்கறி பைகளுடன் எங்கள் பிரதிநிதி உங்கள் வீட்டுக்கதவை இன்முகத்துடன் தட்டுவார்.

பூச்சிக் கொல்லி மருந்து, மற்றும் ரசாயன உரங்களை 99% தவிர்க்க முயற்சி செய்கிறோம். இயற்கை உரம் இடுவதால் உங்கள் உடல் நலம் முற்றிலும் பாதுகாக்கப்படுகிறது.

### காய்கறி விபரம்

தக்காளி, வெண்டைக்காய், கத்தரிக்காய், வாழைக்காய், புடலங்காய், அவரைக்காய், பாகற்காய், பீர்க்கங்காய், கண்டைக்காய், சுரைக்காய், பூசணிக்காய், பரங்கிக்காய், கொத்தவரங்காய், முருங்கைக்காய், முள்ளங்கி, எலுமிச்சம் பழம், இஞ்சி, கொத்துமல்லி, கறிவேப்பிலை, மற்றும் கீரை வகைகளும் மாற்றி மாற்றி சப்ளை செய்யப்படும்.

**Phone : 4342098, 4840150**

திட்டமிட்ட குடும்பத்துக்கு தேவையான காய்கறிகள் வழங்கப்படும். இயற்கை சீற்றங்களால் ஏதேனும் சேதாரம் ஏற்பட்டாலொழிய எங்கள் சப்ளை ஒருபோதும் நிற்காது.

**NATARAJ ESTATES**

"Shanthi Complex", 3rd Floor, 26, Ranganathan Street, T. Nagar, Madras - 600 017.
Branches : Tiruvarur, Thanjavur, Kancheepuram.



NATARAJ GROUP OF COMPANIES
Nataraj Finance & Investments.
Nataraj Chits (Tamilnadu) Pvt., ltd.,
Nataraj Exports Overseas, Nataraj Publications,
Nataraj Oil Mills, T.K. Geetha Agro Products."

**24% P.A.**



• தங்கபாலு

பட்ட ஒரு கோடி ரூபாய் பணத்தை அப்படியே தொகுதிக்குச் செலவு செய்திருப்பதால் மக்களிடம் நல்ல பெயர். சேலம் மருத்துவக் கல்லூரி, ஏர்போர்ட், மேம்பாலம் என்று ஏகப்பட்ட திட்டங்களெல்லாம் இவரது முயற்சியால் நடந்தவைதான். இருப்பினும் எங்களுக்கிருக்கிற ஒரே மைனஸ் பாயிண்ட் சின்னம். இதுவரை ரங்கராஜன் குமாரமங்கலத்துக்குக் கைச் சின்னத்திலேயே வாக்களித்துப் பழக்கப்பட்டவர்கள், இப்போது 'மலர் மங்கை' சின்னத்துக்கு வாக்களிக்க வேண்டும். நிறைய பேர் ரங்கராஜன் குமாரமங்கலத்துக்குப் போடுவதாக நினைத்துக் கொண்டே கைச் சின்னத்துக்குப் போட்டு விடக்கூடும். எனவேதான், நாங்கள் எங்களின் புதிய சின்னத்தை மக்களிடம் அறிமுகப் படுத்துவதில் தீவிரமாக இறங்கியிருக்கிறோம்!" என்கிறார்கள், ரங்கராஜன் குமாரமங்கலம் தரப்பினர்.

# பங்காளிப் போட்டி: காணாமல் போவாரா தங்கபாலு?

சேலம் எம்.பி. தொகுதிக்கான போட்டிதான் வித்தியாசமானது. போட்டியிடும் கட்சிகள் அப்படி!. ராவ்காங்கிரஸ், மூப்பனார் காங்கிரஸ், வாழப்பாடி காங்கிரஸ் என்று மூன்று பங்காளிகளுக்குள் போட்டி!

வாழப்பாடி காங்கிரஸில் போட்டியிடும் ரங்கராஜன் குமாரமங்கலம், கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாகவே இத்தொகுதி எம்.பி. இப்போது நான்காவது முறையாக மீண்டும் களத்தில் இருப்பவர். ரங்கராஜன் குமாரமங்கலம் மாத்திரமன்றி, அவரது பாட்டனார் டாக்டர் சுப்பராயன், தந்தை மோகன் 'குமாரமங்கலம் என்று குடும்பமே சேலத்துக்குப் பரிச்சயமானது.

"இது மட்டுமன்றி தொகுதிக்கு நிறையச் செய்திருக்கிறார். எம்.பி.களுக்குக் கொடுக்கப்

தி.மு.க. கூட்டணியோடும் ரஜினி ரசிகர் மன்றத்தினர் ஆதரவோடும் மூப்பனாரின் தமிழக காங்கிரஸ் சார்பாகப் போட்டியிடும் தேவதாஸ், இளைஞர். இவரது அப்பா ராமசாமி உடையார் 62-67-ல் எம்.எல்.ஏ.வாக இருந்தவர். இப்போதும் சத்தியமூர்த்தி பவன் டிரஸ்டிகளில் ஒருவர். பஸ் கம்பெனி அதிபர். சேலத்திலுள்ள மரியாதைமிக்க குடும்பங்களில் இவர் குடும்பமும் ஒன்று. எதிர்க்கட்சிக்காரர்களாலும் குறைசொல்ல முடியாத குடும்பம் - அரசியல் வாழ்க்கை.

"இருந்தாலும் ரங்கராஜன் குமாரமங்கலத்துக்கு இருக்கும் தனிப்பட்ட செல்வாக்கையும் மீறி உங்களால் வெற்றி பெற முடியுமா?" என்றோம் தேவதாஸிடம்.

"பதவியில் இருப்பவர்கள் என்னதான் நல்லது செய்திருந் தாலும் எதிர்ப்பும் இருந்தே தீரும். அந்த வகையில் பார்த் தால் எனக்கு எதிர்ப்பு என்பதே இடையாது. இப்போ தைய ஊழல் ஆட்சி பற்றி மக்கள் நன்றாகவே தெரிந் திருக்கிறார்கள். குறிப்பாக பொது விநியோக முறை - ரேஷன் - சரியில்லை. இருபது கிலோ அரிசி தருவதாகச் சொல்லப்பட்டாலும் பன்னிரண்டு கிலோதான் தருகிறார்கள். எம்.ஜி.ஆருக்கு இருந்த அபரிமித செல்வாக் குக்கு மிக முக்கிய காரணம் ரேஷன் பொருட்கள் சரியாக வழங்கப்பட்டதுதான். அது சரியில்லை என்றால், ஆட்சி ஆட்டம் காணும் என்பது

• ரங்கராஜன் குமாரமங்கலம்



• தேவதாஸ்



உறுதி. அந்த வகையில் இந்த ஆட்சிக்கு எதிரான வாக்குகளெல்லாம் எனக்குத் தான். நான் பணக்காரன் என்பதை வேண்டுமானால் ஒரு மைனஸ் பாயின்ட் டாகச் சொல்லலாம். ஆனாலும் நான் எந்த பந்தாவுமில்லாமல் அனைவரிடமும் பழகுவதால் அதுவும் அடிபட்டுப் போய் விடுகிறது!"

"ஆனால், சைக்கிள் சின்னம் என்பது மக்களுக்குப் புதிய சின்னமாக இருப்பதால் ஒரு தடுமாற்றம் ஏற்படாதா?"

"ஏற்படாது. இன்றைய ஆட்சிக்கு எதிராக வாக்களிப்பதால், மக்கள் சின்னம் பற்றிய விழிப் புணர்வுடன்தான் இருக்கிறார்கள்!" என்கிறார் தேவதாஸ்.

மூன்றாவதாக கே.வி. தங்கபாலு. ராவ் காங்கிரஸ் சார்பாகப் போட்டியிடுபவர். மத்திய அமைச்சராகவும் ஜெ. ஆட்சி ஆதரவாளராகவும் பணியாற்றுபவர்!

"சென்ற முறை தர்மபுரியில் போட்டியிட்டு வென்ற நீங்கள் இப்போது சேலத்தில் போட்டியிடுவானேன்?" - தங்கபாலுவிடம் கேட்டோம்.

"சென்ற முறையே நான் சேலத்தில் போட்டியிடுவதா கத்தான் இருந்தேன். என்றாலும் ரங்கராஜன் குமாரமங் கலம் எனது நண்பர் என்பதால் அவருக்காக விட்டுக் கொடுத்தேன். இப்போது அவர் காங்கிரஸின் துரோகியாக மாறிவிட்டதால் நான் அவரை எதிர்த்துப் போட்டியிடுகிறேன்!"

"ரங்கராஜன் குமாரமங்கலத்துக்கு இருக்கும் தனிப்பட்ட செல்வாக்கு, மூப்பனார் காங்கிரஸ் வேட்பாளராகப் போட்டியிடும் தேவதாஸ் குடும்பத்துக்கிருக்கும் மரியாதை... இவற்றையும் மீறி நீங்கள் வெற்றி பெற முடியுமா?"

"கட்சியின் துரோகிகளை மக்கள் நிச்சயம் புறக்கணிப் பார்கள். தொண்டர்களில் தொண்ணூறு சதம் எங்களிடம் தான் இருக்கிறார்கள்..."

"ஜெயலலிதா ஆட்சியின் ஊழல் பற்றி அனை வருக்கும் தெரியும். இந்த நிலையிலும் அதனோடு கூட்டு வைத்துக் கொண்டு போட்டியிடுவது சரிதானா?"

"காங்கிரஸால் தனித்து நின்று வெற்றி பெற முடியாது. அதனால்தான் கூட்டணி. கருணாநிதியின் ஊழல் பற்றியும் நாடறியுமே! அந்த வகையில் பார்த்தால் அ.தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணிதான் ஒரே கூட்டணி - சரியான கூட்டணி - ராஜீவ் அமைத்த கூட்டணி. அதனால் மக்கள் எங்களைத்தான் தேர்ந்தெடுப்பார்கள்!"

"ரஜினி நேரடியாகப் பிரசாரம் செய்ய வந்தால் உங்கள் நிலை என்ன?" என்று கேட்ட போது... "அவர் வர மாட் டார் என நம்புகிறோம்!" - என்று ஒரு போடு போட்டார் தங்கபாலு!

- சாங்கிருத்தியாயன்

# வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



## அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!

அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி
மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான
டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும்
தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

**FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS**

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone : 4340224/4340210/4342667. Fax : 044-2344333

# சுஜாதா பக்கம்



"கவிதை, உரைநடையைவிடக் குறைந்த வார்த்தைகளில் அதிகம் சொல்கிறது" என்றார் வால்டேர். எனது நண்பர், கவிஞர் மனுஷ்யபுத்திரன் 1993ல் ஒரு கடிதத்துடன் இணைப்பாக, பிடித்த தமிழ்க் கவிஞர்களின் கவிதைகளின் தொகுப்பு ஒன்றை சிரத்தையாக படியெடுத்து அனுப்பியிருந்தார். நான் போற்றிப் பாதுகாக்கும் கடிதங்களில் அது ஒன்று. எனக்காக அண்மைக்காலக் கவிதைகள் பலவற்றைப் படித்துத் தேர்ந்தெடுத்து, அருமையான கவிதைகள் சிலவற்றை' அனுப்பியிருந்தார். கவிஞன் மற்றொரு கவிஞனைப் பாராட்டுவதே அரிதாக இருக்கும் நாட்களில் மனுஷ்ய புத்திரன் போன்றவர்கள் இருப்பதால் இப்போதும் 'சில' ரயில் வண்டிகள் தாமதமில்லாது வருகின்றன.

எனக்குப் பிடித்த மூன்று கவிதைகள் இப்போது தருகிறேன்.

1. ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு
கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை பெரும எமக்கே; மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய் பெரும நின் ஒன்னாதோர்க்கே

(நீர்த்துறையில் சிறுவர்களை தன் தந்தத்தை அலம்ப அனுமதிக்கும் யானைபோல எங்களுக்கெல்லாம் இனியவன் நீ. உன் பகைவர்களுக்கு, அதே யானைபோல் நெருங்க முடியாத வலிமை உள்ளவன் நீ)

2. ஜோசியர் கிளிகள்
சீட்டெடுக்க மறுக்கிறது
பங்களா நாய்கள்
காவல் காக்க மறுக்கிறது
காளை மாடுகள்
வண்டி இழுக்க மறுக்கிறது
பட்டினி போட்டால் மிருகங்கள்
வேலை செய்ய மறுக்கின்றன
நாம் பட்டினி கிடக்கிறோம்
பாடுபடுகிறோம்.

3. புயல்காற்று தாக்கும் போது
மரங்கள் எப்போதும் திடுக்கிடுகின்றன.
ஆனால் ஏன் என்று கேட்பதே இல்லை.
(When gales assault them
Trees are always astonished,
But never ask why.)

முதல் கவிதை ஔவையார்- புறநானூறு எண் 94. இரண்டாவது கவிதை மு. சுயம்புலிங்கம்- ஊர்க்கூட்டம் தொகுப்பிலிருந்து. மூன்றாவது டபிள்யு. எச்.ஆடன் (W.H.AUDEN) 'ஒரு தெய்வ மகனுக்கு கடிதம்' (EPISTLE TO A GODSON) என்னும் தொகுப்பிலிருந்து.

கவிதை, காலம் தேசம் மொழி மூன்றையும் கடந்தது என்பதற்கு உதாரணமாக இந்தக் கவிதைகள்.

மூன்று கவிஞர்களைப் பற்றிய எனக்குத் தெரிந்த சிறு குறிப்புக்கள்: ஔவையார் சங்ககாலப் புலவர். பாணர் மரபினர். அதியமான் நெடுமான் அஞ்சியோடு நட்பு பூண்டு பலகாலம் அவன் அவையில் வாழ்ந்திருந்து, அவனையும் மற்றவரையும் பாடினவர். பெண்பாலர். தெய்வப்புலவர் என்னும் கீர்த்தியோடு வாழ்ந்தவர்.

மு. சுயம்புலிங்கம் தற்காலத் தமிழ்க் கவிஞர். 'ஊர்க்கூட்டம்' என்னும் தொகுப்பு முக்கியமானது. "நீட்டுக்கறை படிந்த பூ அழிந்த சேலைகள்" என்னும் கவிதையை தேடிப் படித்துப் பாருங்கள். கீழ்நிலை மக்களின் நிலையை கண்ணீர் வரச் சொல்லியிருக்கிறார்.

ஆடன் 1907ல் இங்கிலாந்தில் பிறந்தவர். 1939ல் அமெரிக்கா வந்து அந்த தேசத்து பிரஜையானார். ஸ்டீபன் ஸ்பெண்டர், கிறிஸ்டோபர் இஷர்வுட் இவர்களுடன் தொடர்பு கொண்ட முக்கியமான கவிஞர். நூற்றுக் கணக்கான கவிதைகள் எழுதித் தொகுத்தும் இருக்கிறார். "சுவர்கள் இல்லாத நகரம்" குறிப்பிடத்தக்க தொகுப்பு. 1972ல் ஆடன் இங்கிலாந்து திரும்பி ஆக்ஸ்போர்டில் வாழ்ந்தார்.

"இருபது வயதில் நான் முதியவர்களை வெறுப்பேற்ற யோசித்தேன். இப்போது அறுபது ஆகி இளைஞர்களைத் தொந்தரவு செய்யலாம் என நம்புகிறேன்" என்கிறார் தன் கவிதைகள் மூலம். என் எழுத்தாள நண்பர்கள் சிலர் கவிதைப் பக்கம் தலை வைத்துப் படுப்பதே இல்லை என்று பெருமையுடன் சொல்லிக் கொள்கிறார்கள். அவர்களைப் பார்த்து பரிதாபப்படத்தான் தோன்றுகிறது.

(மீண்டும் அடுத்த வாரம்)

# ஆகாயச் சிறகுகள்

## 3

கமல் ரசிகர்களும் வாலிபர் சங்கத் தோழர்களும் மிகுந்த தோழமையுடன் இயங்கினர். அன்றைக்குத் தான் ரத்த தானம். பஸ்களில் வந்து கொண்டிருந்தார்கள் இளைஞர்கள், குழுக் குழுவாக.

இங்கும் பெரிய க்யூ. நீண்ட வரிசை. முதல் ஆட்களாக ராஜேந்திரனும் பால்ச்சாமியும் ரத்ததானம் வழங்கினர். வெளியே வந்தனர். வரிசையில் நின்ற எல்லா இளைஞர்களிடமும் புன்னகையும், பேச்சுமாக உற்சாகப்படுத்தி விட்டு, ஒரு வெத்தலை பாக்குக் கடைப் பக்க மாக வந்தனர். சிவப்பு பார்டர் போட்ட வெள் ளைப் பாலியஸ்டர் வேட்டியும், வெள்ளைச் சட்டையுமாக ராஜேந்திரன் ஜொலித்தான். கொத்து மீசை.

"ரெண்டு டொரினோ குடுங்க" என்றான் ராஜேந்திரன்.

ரெண்டு பேரும் குடித்தார்கள். கடையின் நிழலில் கிடந்த பெஞ்சில் உட்கார்ந்தனர். ராஜேந்திரனின் பார்வை, இளைஞர்கள் மேல். ரத்ததானம் வழங்கக் காத்திருக்கும் இளைஞர் களின் உற்சாகத்தையே கவனித்தான்.

பால்ச்சாமி, ராஜேந்திரனையே பார்த்திரான். மனசுக்குள் முண்டிக் கொண்டிருக்கிற நினைவுகள். நாக்கு வரை வந்துவிட்டு, நின்று கொள் கிற கேள்விகள். தயக்கமும் தடுமாற்றமுமாய்... பால்ச்சாமி.

"என்ன பாலு... என்னமோ கேக்கணும்னு நெனைக்குறீங்க. என்ன விஷயம்? சும்மா கேளுங்க."

பால்ச்சாமி "ஒண்ணுமில்லே!" என்று மென்று விழுங்கினான். திடீர் தைரியத்தில் கேள்வி, குபீரென்று பாய்ந்தது.

"நீங்க சினிமா பார்ப்பீங்களா?"

அவன் தயங்கிய நீட்சியையும் கேள்வி கேட்ட குபீர்த் தன்மையையும் பார்த்து... அவன் முகம் நோக்கிச் சிரித்தான். "இதைக் கேக்கவா பாலு, இம்புட்டுத் தயக்கம்?" என்ற ராஜேந்திரன், பதிலையே ஒரு கேள்வியாகச் சொன்னான் : "ஏன்... சினிமா பாக்குறது கிரிமினல் குற்றமா, சமூக விரோதக் காரியமா?"

"இல்லே.. உங்களுக்கு டயம் கெடைக்காதே.."

"ஏன்? நானும் சாப்புடுறேன். கல்யாணம் பண்ணியிருக்கேன். குடும்பம் நடத்துறேன். வாழ்க்கையை ஒரு பிழைப்பாகச் சிறுமைப் படுத்தாம... வாழ்க்கையை வாழ்க்கையாகவே வாழ நெனைக்கிறேன். வாழுறேன். இதெல்லாம் நடக்குறப்ப, சினிமா பாக்கவா டயமில்லாமப் போயிரும்?"

அடுத்த கேள்வியை கேட்க விடாமல் உள் ளுக்குள் ஒரு கேள்வி தடுத்தது. ராஜேந்திரனின் பேச்சு, இயல்பாக வந்தது. வார்த்தைக்காக தேடிக் காத்திருக்காமல்... சுவாசத்தின் சுபாவமாய்.. தானியப் பெட்டியைக் கவிழ்த்தவுடன் சரியும் தானியத்தைப் போல.. மனசின் உண்மையாக..

அதிலும் ஒரு வாக்கியம், இவனுள் ஒரு முடிச்சாக இறுக்கியது. 'வாழ்க்கையை ஒரு பிழைப்பாகச் சிறுமைப்படுத்தாம... வாழ்க் கையை வாழ்க்கையாகவே வாழ நெனைக் குறேன்.'

அப்படீன்னா.. வாழ்க்கை வேறு, பிழைப்பு வேறா? பிழைப்பு என்றால் சிறுமையா? எது பிழைப்பு? எது வாழ்க்கை? ரெண்டுக்கும் என்ன வித்தி யாசம்?

இந்த ஒரு வாக்கியமே அவன் மனக் குளத்தில் ஒரு கல் லாக விழ... வட்ட வட்டமாய் எழுகிற எண்ணற்ற எண்ண அலைகள்.

"ஹ்ம்?" என்ற கேள்விக்குறியோடு. கேள் வியை எதிர்பார்த்த சப்த நீண்டலில் விழித் தான், பால்ச்சாமி.

ஒரு சின்ன பிரமிப்போடு ராஜேந்திரன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். அவன் பார் வையில், இயல்பான மரியாதை உணர்ச்சி.

"நாங்க கமல் ரசிகங்க. நீங்க கமல் படம் பாத்துருக்கீங்களா? கமலைப் பத்தியும், கமல் ரசிகங்களைப் பத்தியும் நீங்க என்ன நெனைக் கிறீங்க?"

"மொதல்லே... பாலு, நாம இயல்பாப் பேசுவோம். நீங்க ஏதோ என்னைப் பேட்டி காண்ற மாதிரி கேள்வி கேட்க, நா ஏதோ தேவலோகப் பிரமுகர் மாதிரி பதில் சொல்ல... இந்த செயற்கைத்தன்மை வேண்டாம். நீங் களும் நானும் ஒரே ஊர்க்காரங்க, ப்ரெண்ட்ஸ்ங் கிற லெவல்லேயே பேசுவோமே.."

"ம்.. அதுவும் சரிதான்!"

"சரி... நீங்க கேட்ட கேள்விக்கு இப்ப நா வாரேன். சினிமா பாக்குற பழக்கம் உள்ளவன் நா. கமல் சினிமாவும் பாத்துருக்கேன். பாக்கு றேன். நல்ல சினிமாவை ரசிக்குற – உருவாக் குற – சமூகப் பொறுப்போட ரசிகர்கள் இருக் கணும்னு நெனைக்குறேன். கமல் ரசிகர்களைப் பத்தி நா என்ன நெனைக்குறேன்னு கேட் டீகளே... பதில் சொல்றேன். 'சகலகலா வல்ல

வன்' கமல் ரசிகர் மன்றத் தலைவனாக இருந்த வன் நா..."

"நீங்களா...? கமல் ரசிகர் மன்றத் தலைவராகவா?"

"ம்... என்னோட சின்னஞ்சிறு கடந்த காலத்துலே அதுவும் ஒரு நெஜம்."

பால்ச்சாமியின் நெஞ்சுக்குள் ஐஸ்கட்டி விழுந்த மாதிரி யிருந்தது. சட்டென்று தீயாகப் பற்றிக் கொண்ட மகிழ்ச்சிப் பரவசம். வியப்பும் ஆனந்தப் படபடப்புமாக... முகமெல்லாம் மலர்ந்து விரிந்தது. "நெஜமாவா?" என்று அடக்கிக் கொள்ளவே முடியாத ஆர்வக் கிளர்ச்சியோடு பிரமித்தான், பால்ச்சாமி.

"ம்" என்று தலையசைத்த ராஜேந்திரன் உதடுகளில் பூத்தது ஒரு புன்னகை. பெருந்தன்மைப் பேரழகோடு சிரித்த புன்னகை.

"நெஜந்தான்" என்றான். பால்ச்சாமியின் முகத்தில் பளிச்சிட்ட ஒளிச் சிரிப்பு, வியப்பில் விரிந்த உதடுகளும் கண்களும் அப்படியே உறைந்து போனதைப் போல நிலைத்து ஒளிர்ந்தன. இதையெல்லாம் பார்த்து, உள்ளுக்குள் ததும்



மேலாண்மை பொன்னுச்சாமி

● வானமே
நீ மட்டும்
எங்கள்
அரசியல்வாதியின்
கைக்கு எட்டும் தொலைவில்
இருந்திருந்தால்
உன்னை
சுவரொட்டி ஒட்டியே
அசிங்கப்படுத்திவிட்டிருப்பார்கள்

- பி. சி. ரகு



பினான் ராஜேந்திரன்.

'கமல் ரசிகனாக இருந்தவன்' என்ற நிஜம், பால்சாமிக்குள் வெப்பத்தைச் செலுத்தியது. அவன் முழுக்க இளித்தான். இனிமைப் பரவசத்தில் பொங்கி நுரை வழிந்தான்.

ராஜேந்திரனுக்கும் தனக்குமாய் இடையில் இருந்த மரியாதையான தூரத்தை, பொங்கி வழிந்த நேசம், முழுக்க அழித்து விட்டதை மனசுக்குள் உணர்ந்தான், பால்சாமி. அவன் கையைப் பிடித்துக் குலுக்குகிற ஆர்வத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை, அவனால்.

ராஜேந்திரனை பால்சாமியின் பரவசத் தத்தளிப்பு மீண்டும் தீண்டியது. சீண்டியது. தன்னை வெளிப்படுத்தும்படி தூண்டியது.

"கமல் ரசிகர் மன்றத் தலைவனா இருந்ததுதா... கடந்த காலம். கமலை இப்பவும் நேசிக்கிற கலைநேசனாகத்தான் இருக்குறேன். நிகழ் காலத்துலேயும் கமலை நா ரொம்ப மதிக்கிறேன்..."

"எப்படி, எப்படி?"

"இப்ப இருக்குற சினிமா நடிகர்களிலேயே கமல் ஒருத்தர்தான் சினிமாவைத் தொழிலா கருதாம, கலையா கருதுறாரு. தொழிலா அதை மதித்து ஈடுபாட்டோட நடிக்குற நடிகர்கள் இப்பவும் இருக்காக. கமல் ஒருத்தர்தான் கலையா நெனைக்குறாரு. அது மட்டுமில்லே..."

"ம்...? சொல்லுங்க."

பால்சாமிக்குள் பால் வார்த்த மாதிரி யிருந்தது. பரவசத் ததும்பல்.

"தமிழ் சினிமாவை கமல் அசல் தன்மையோட நேசிக்கிறாரு. ஆத்மார்த்தமா நேசிக்கிறாரு. தமிழ் சினிமாவோட தரத்தை சர்வதேச லெவலுக்கு ஒசத்தணும்னு ஆசைப்படுறாரு. 'ஆர்ட் பிலிம் தரத்துலேயே தமிழ் ஜனங்க ரசிக்கிற மாதிரி படம் பண்ணணும்'னு ஆசைப்படுறாரு. அது வெறும் ஆசை மட்டுமில்லே. லட்சியம். நோக்கம். குறியீடு. அதனாலேதா அதுக்காக உழைக்கறாரு. சினிமாவோட சகல பிரிவுகளிலும் தன்னோட தெறமைகளை வளர்த்துக்குறாரு. கத்துக்கிடுறாரு..."

"ரைட்... ரைட்... நீங்க சொல்றது முழுக்க கரெக்ட்."

"சகலகலா வல்லவன், சிங்காரவேலன் மாதிரியான கமர்ஷியல் குப்பைகள்லே நடிக்குறாரு. பணத்தையும் பார்க்குறாரு. ஆனா, அவரு சொந்தமா தயாரிச்ச படங்கள் பூராவும் தமிழ் சினிமாவைத் தாண்டி, பத்து வருஷத்துக்கு அப்பாலே நின்னுச்சு. அந்தக் காலத்துலே 'உணர்ச்சிகள்', இந்தக் காலத்துலே 'மகாநதி' எல்லாமே தமிழ் சினிமா லெவலை, பத்து வருஷத்துக்கு கடந்து நின்னுச்சு... தமிழ்ச் சினிமாவுக்கு கமல், புதுப்புதுக் குறிக்கோளை உருவாக்கி வைக்கிறாரு. இது எவ்வளவு பெரிய விஷயம்?"

பேசப் பேச... பரவசமானான், பால்சாமி. அவனுக்குள் அரூபமாய் அலைந்த உணர்வுகளுக்கெல்லாம்... வடிவமும் வார்த்தைகளும் தந்து வெளிப்படுத்திய மாதிரியே இருந்தது.

பிரமிப்பாக இருந்தது.

உலர்ந்து போனவரைப் போல தோற்றமளித்த ராஜேந்திரனுக்குள், இத்தனை நுட்பமான கலைப் பார்வையா? இத்தனை வளமான விவரங்களா?

வறட்சியானவரில்லை, இந்த ஆள். ஆழ்ந்து அடங்கி உறைந்து போன வண்டல், இவர். வளமும் அழகும் உள்ளடக்கிய வண்டல்.

நிழல் குறைந்து, பால்சாமி உட்கார்ந்த இடம் வெயிலாகி விட்டது. வெயிலை – வெயிலின் வெக்கையை உணரவேயில்லை அவன்.

ஆச்சர்யத்தில் தத்தளித்தான். ராஜேந்திரனுக்கு ரசிகனாகவே ஆகிவிட்டான்.

ராஜேந்திரனைப் பற்றியேதான்... எந்நேரமும் பேச்சு. யாரிடம், எதற்கு வாயைத் திறந்தாலும், ராஜேந்திரனைப் பற்றிய புகழ்ச்சிதான்.

**ம**றுமாதம் –

அந்த ஊரில் வாலிபர் சங்கம் சார்பாக ஒரு பேரவை. க்யூபா போன்ற வெளிநாடுகளுக்கெல்லாம் போய் வந்த மாநிலத் தலைவர் பேச வருகிறார்.

கேள்விப்பட்ட பால்சாமி, பேரவையில் கலந்து கொள்ள ஆசைப்பட்டான். வெளிநாட்டுச் சுற்றுப் பயணங்களெல்லாம் செய்த பிரம்மாண்டமான அந்தத் தலைவரைக் கண்களால் பார்க்க வேண்டும். நெருங்கி நின்று காண வேண்டும். தொட்டுப் பார்க்க வேண்டும் என்றெல்லாம் ஆசைப்பட்டான்.

ராஜேந்திரனைத் தேடித் தேடியலைந்தான். பிடித்து விட்டான்.

"என்ன பாலு... எதுக்குத் தேடுனீக?"

"உங்க பேரவையிலே நா கலந்துக்கலாமா?"

"ஓ... கலந்துக்கலாமே...? ஆசைப்பட்டா வாங்க."

"அந்தத் தலைவரோட என்னை அறிமுகம் செய்து வைப்பீகளா?"

"செய்யறேன்."

அந்தப் பேரவையனுபவ அதிர்ச்சிதான், பால்சாமியை ஒரு கம்யூனிஸ்டாக்கியது.

(தொடரும்)





**மூத்த தலைவர் மூப்பனார் !**

**தேசம், மக்கள் இந்த இரண்டும்தான்**

**இவரது சைக்கிளின் இரண்டு சக்கரங்கள்.**

**அவர் உண்மையின் வடிவமாய் ஓங்கி நிற்கிறார் !**

**உங்களையும் எங்களையும் தாங்கி நிற்கிறார் !**

# தமிழர் நலன் காக்க

# ஆதரிப்பீர் !

# தமிழ் மாநில காங்கிரஸ் (மூப்பனார்)



# வாக்களிப்பீர் !

# சைக்கிள் சின்னம்

வெளியீடு : தலைவர், தமிழ் மாநில காங்கிரஸ் (மூப்பனார்), சென்னை – 600 002.




1996 ஏப்ரல் 28
தாது சித்திரை 16
மலர் : 54
இதழ் : 39


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ஜெயலலிதாவின் தோல்வி பயம்!

“எங்களைப் பற்றிப் பொய் பேசுவதை நீங்கள் உடனடியாக நிறுத்தாவிட்டால், உங்களைப் பற்றிய உண்மைகளையெல்லாம் நாங்கள் எடுத்துச் சொல்ல வேண்டியிருக்கும்...!”

- பல வருடங்களுக்கு முன்பு அமெரிக்க அதிபர் தேர்தலுக்குப் போட்டியிட்ட அட்லய் ஸ்டீவன்ஸன் என்பவர், தம் மீது அபாண்டப் பழிகள் சுமத்தப்பட்டபோது இப்படிப் பேசினார்.

அமெரிக்காவில் சரித்திரப் பிரசித்தி அடைந்துவிட்டது அந்த வாக்கியம்.

நம் தமிழ்நாட்டிலோ, ஸ்டீவன்ஸனின் கூற்றைத் தலைகீழாக்கியிருக்கிறார் ஜெயலலிதா! தம்மைப் பற்றிய உண்மைகளையெல்லாம் மறைப்பதற்காக, அபாண்டமான பொய்களைச் சொல்லி வருகிறார். லேட்டஸ்ட்டாக, “ராஜீவ் கொலையில் மூப்பனாருக்குப் பங்கு உண்டு!” என்பது அவரது அண்டப் புளுகு.

தமது ஆட்சி தர்மத்தின் ஆட்சி என்றும் நடக்கவிருப்பது தர்ம யுத்தம் என்றும் மேடைக்கு மேடை முழங்குகிறார் முதல்வர்.

எதிரணி என்பதற்காகவே ரஜினி ரசிகர் மன்றத்து ஆட்களை அடித்து நொறுக்குவது தான் தர்மத்தின் ஆட்சியா?

‘கண்ணகியைப் போல் நீதி கேட்கிறேன்!’ என்று ஊர் ஊராகப் போய்ப் புலம்பிக் கொண்டிருக்கிறார்.




அவருடைய பிரசாரத்தின்போது உடன் சென்ற ஜீப் மோதியதால் அடிபட்ட ஒன்பது பெண்களுக்கு என்ன நீதி கிடைக்கப் போகிறது?

தேர்தல் கமிஷனின் தடை உத்தரவு வந்த பிறகும் அரசு ஹெலிகாப்டரைப் பிரசாரத்துக்குத் தொடர்ந்து பயன்படுத்தியிருக்கிறார் 'தர்மத்தின் பிரதிநிதி'.

தொலைக்காட்சி பிரசார ஒளிபரப்புக்கான அத்தனை விதிகளையும் மீறியதால், அ.தி.மு.க. தலைவிக்கு ஒளிபரப்பு வாய்ப்பு கிடைக்காமல் போனது. உடனே மத்திய அரசைக் கொண்டு சென்னைத் தொலைக்காட்சி நிலையத்தாரை நெருக்கச் செய்து வாய்ப்புப் பெற்றுவிட்டார் நீதி கேட்கும் கண்ணகி!

தர்மமே உருவான இந்தத் தலைவியின் 'பிரசார' உபயோகத்துக்கென வெளி மாநிலங்களிலிருந்து ஏராள வாகனங்கள் தருவிக்கப்பட்டுக் காத்திருக்கின்றன. அவை வாக்காளர்களை வாக்குச் சாவடிக்கு அழைத்துச் செல்ல மட்டுமின்றி வேறு பல விஷயங்களுக்கும் உபயோகிக்கப்படும் என்று மூப்பனார் விரலைச் சுண்டிக் காட்டியிருக்கிறார்!

செங்கை - எம்.ஜி.ஆர். மாவட்ட கிராமங்களில், தேர்தல் விதிகளை மீறித் தொலைக்காட்சிப் பெட்டிகள் நிறுவப்பட்டதும், அவை தேர்தல் கமிஷனால் பறிமுதல் செய்யப்பட்டதும் ஜெயலலிதாவின் தர்மம் எத்தகையது என்பதை வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன!

நீதி கேட்கும் கண்ணகியின் சேமிப்பு வங்கிக் கணக்கில் கோடி கோடியாகப் பணம் டெபாஸிட் ஆனதற்கான ஆதாரங்கள் கிடைத்துள்ளன. அதுகுறித்து கேள்வி மேல் கேள்வி எழுப்பும் ப. சிதம்பரத்துக்கு, புரட்சித் தலைவியால் ஒரு பதில் கூடச் சொல்ல முடியவில்லை!

எடுத்துச் சொல்லி வோட்டுக் கேட்க அ.தி.மு.க. வசம் திட்டங்களுமில்லை; பெருமைக்குரிய சாதனைகளுமில்லை. எனவே, எதிர்க்கட்சிகளின் தாக்குதலைச் சமாளிக்க, பொய்




களால் கவசமணிந்து கொள்ள வேண்டிய கட்டாயம் ஜெயலலிதாவுக்கு.

அவருடைய பாதுகாப்புக் கவசம் பலவீனமானது, பயனற்றது என்பதைப் பிரசாரப் பயணங்களின் போது எழும் வலுவான எதிர்ப்பு உணர்த்துகிறது. அ.தி.மு.க.வின் அமைச்சர்கள், எம்.எல்.ஏக்கள் மட்டுமின்றி, முதல்வரேகூட மக்களின் கடும் எதிர்ப்பையும் புறக்கணிப்பையும் சந்திக்க வேண்டியிருக்கிறது.

புறக்கணிப்பும் எதிர்ப்பும் அதிகரிக்க அதிகரிக்க, ஜெயலலிதாவுக்குத் தோல்வி குறித்த பயமும் அதிகரிக்கிறது. இதன் விளைவாக அவரது தவறுகளும் அதிகார துஷ்பிரயோகங்களும் அதிகரிக்கின்றன. அவற்றால் பாதிக்கப்படக்கூடிய எதிர் அணியினர் மிகவும் எச்சரிக்கையுடன், கட்டுப்பாடுடன் இருக்க வேண்டும். இல்லையெனில் வன்முறை காரணமாகத் தேர்தலே ரத்தாகிவிடும் சூழ்நிலை உருவாகிவிடும்.

இன்னொரு பேரபாயமும் தமிழகத்தை எதிர்நோக்கியுள்ளது. மக்களின் கோபத்தைத் தணிக்க 'பணம்' என்னும் பிரம்மாஸ்திரத்தைக் கையாள்வார் ஜெயலலிதா. தொகுதிப் பிரசாரப் பணிகளுக்கு அவரது அமைச்சர்கள் 'கேரி பேக்' நிறைய கரன்சி நோட்டுகளை வினியோகித்துக் கொண்டிருக்கிறார்கள்!

தமிழக மக்களையும் அவர்களின் வாக்குகளையும் இப்படி விலைகொடுத்து வாங்கிவிடலாம் என்ற அகம்பாவமே எல்லா பாதகங்களிலும் மகா பாதகம். இந்த ஒரு காரணத்துக்காகவே வாக்காளர்கள் ஜெயலலிதாவையும் அ.தி.மு.க.வையும் நிராகரிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

ஊழலும் லஞ்சமும் நிறைந்த ஆட்சிகளை நிராகரிப்பதில் தமிழகம் பல தேர்தல்களில் ஏற்கெனவே தனி முத்திரை பதித்திருக்கிறது. அந்தச் சரித்திரத்தை இந்த வானளாவிய ஊழல் ஆட்சி விஷயத்தில் நாம் மீண்டும் நிகழ்த்திக் காட்ட வேண்டும்.



நாவலர்

தொகுதி :

# தேனீயாகக் கொட்டுகிறது தேனி!

**தே**னி இப்போது தேனீயாகக் கொட்டுகிறது. நம்மையல்ல; அமைச்சர் நெடுஞ்செழியனை. வோட்டுக் கேட்பதற்காகத் தொகுதிக்குள் எந்தப் பக்கம் போனாலும் எதிர்ப்பு! எப்போதும் இரண்டாவது இடத்திலேயே திருப்தியடைந்துவிடும் நாவலருக்கா இப்படியொரு எதிர்ப்பு?

"அவருக்காவது இரண்டாவது இடம். எங்களுக்கு ஓரிடமும் கிடைக்கவில்லையே...!'' என்று குமுறுகிறார்கள் ஹரிஜன மக்கள்.

''எனக்கு வீடு வேண்டுமென்று கோட்டைக்கே போய் மனு கொடுத்தேன். 'உங்க ஊர்ல எனக்குப் போன எலெக்ஷன்ல ஏழு வோட்டுத்தான கெடச்சது!' என்று என்னை விரட்டியடிக்காத குறையாக அனுப்பிட்டாருங்க...!' என்று புலம்புகிறார், சக்கரையம்மாள்.

"ஜெயிச்சதுக்கப்புறம் தொகுதிப் பக்கமே வரலீங்க... ஏதாவது நிகழ்ச்சின்னு தேனிக்கு வந்தா, பணக்காரங்களோட கெஸ்ட் ஹவுஸிலேயே தங்கிட்டுப் போயிடறார். எங்களை மாதிரி கஷ்டப்படற ஹரிஜனக் காலனிப் பக்கமே தலை வெச்சுப் படுக்கறதில்லே... எலெக்ஷன்னு வந்தாத்தான் வோட்டுப் பிடிக்க வர்றாரு. அப்படிப்பட்டவரை எப்படி நாங்க ஊருக்குள்ள விட முடியும்?'' என்று ஆவேசமாகப் பேசுகிறார் பழனிச்சாமி என்பவர்.

அரண்மனைப் புதூரிலுள்ள இவர்கள்தான் இப்படி கோபப்படுகிறார்கள் என்பதில்லை. அய்யனார்புரத்தைச் சேர்ந்த பாலு என்பவர், "இருபது கிலோ அரிசி தர்றதாகச் சொல்றாங்க. ஆனா ரேஷனுக்குப் போனா பச்சரிசி ஆறுகிலோ, புழுங்கலரிசி ஆறுகிலோன்னு மொத்தம் பன்னிரண்டு கிலோதான் தர்றாங்க. அதுவும் வீட்டுக்கு வந்து அளந்து பார்த்தா எடை குறையுது. இந்த நிலைல அவருக்கு எப்படி நாங்க வோட்டுப் போட முடியும்?'' என்று சீறுகிறார்.



* பாலு : "அளவும் கொறையுது; எடையும் கொறையுது!"

**நா**வலரை எதிர்த்துக் களத்தில் நிற்பவர்கள் மூப்பனாரின் தமிழ் மாநில காங்கிரஸின் என்.ஆர். அழகராஜாவும், ம.தி.மு.க.வைச் சேர்ந்த பொன்னுபிள்ளையும். பொன்னுபிள்ளை ரொம்பவும் எளிமையான



* சக்கரையம்மாள் : "கோட்டைக்கே போய் மனுகொடுத்தேன்!"

வர்தான் என்றாலும் ம.தி.மு.க.வுக்குத் தேனியில் செல்வாக்கு ஏதும் இல்லை என்பதால் நிஜப் போட்டி நாவலருக்கும் அழகராஜாவுக்கும் தான்!

அழகராஜா ஏற்கெனவே தேனி நகர சேர்மனாக இருந்தவர். அப்போது சாக்கடை வசதி போன்ற மக்களின் அடிப்படை வசதிகளைச் செய்ததன் மூலம் மக்களிடம் நல்ல பெயரெடுத்தவர். அதனால் அவர் வோட்டுக் கேட்கச் செல்லும்போது நல்ல வரவேற்பு!

நாவலரை விரட்டியடித்த அதே அரண்மனைப்புதூர் ஹரிஜனக் குடியிருப்பில் அழகராஜா வோட்டுக் கேட்கச் சென்ற சமயம் நாமும் சென்றோம். மாலை போட்டு வரவேற்றதை நாமே நேரில் பார்த்தோம். சாதாரணப் பூ மாலைகள்தான் என்றாலும் அவருக்கு ஏராளப் பூ மாலைகள். "எங்கள் வோட்டு உங்களுக்குத்தான்!'' என்ற இயல்பான கோஷங்கள்.

அரண்மனைப் புதூரில் அவர் வோட்டுக் கேட்டு முடித்துவிட்டு, அடுத்த ஊருக்குச் செல்லுகிறபோது, வழியிலுள்ள ஒரு தென்னந்தோப்பில் நிறுத்தி அவரிடம் பேசினோம்.

''நாவலருக்கு மட்டும் எதற்காக இத்தனை எதிர்ப்புக் காட்டுகிறார்கள் மக்கள்?''

"அடிப்படையான குடிநீர் வசதி கூடச் செய்து தரவில்லையே என்கிற கோபம்தான் மக்களுக்கு. உதாரணத்திற்கு அரண்மனைப் புதூரையே எடுத்துக் கொள்ளுங்கள். ஆற்றுப் படுகையிலேயே இருக்கும் கிராமம் அது. இருந்தும் அங்கே குடிநீர்ப் பிரச்னை என்றால் மக்கள் என்னதான் செய்வார்கள்?

• நாவலர் : உற்சாகமில்லை....

• அழகராஜா : பலமான வரவேற்பு!



• பழனிச்சாமி : "தொகுதிப் பக்கமே வரலீங்க...!"

"சண்முகா நதித்திட்டம் என்று ஒன்று. ஒரு சின்ன அணைகட்டினால் போதும். நிலத்தடி நீர் பெருகும். விவசாயத்துக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். தொகுதியில் மிக முக்கியமான திட்டம் இது. ஆனால் நிதியமைச்சராக இருந்தும் இதையெல்லாம் கண்டு கொள்ளவில்லை அமைச்சர். இந்தக் கோபம்தான் மக்களுக்கு!" என்றார் அழகராஜா.

இவருக்காகத் தி.மு.க. தொண்டர்களும் ரஜினி ரசிகர் மன்றத்தினரும் படு சுறுசுறுப்பாக வோட்டுச் சேகரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த நிலையில் நாவலர் தரப்பில் என்ன நடக்கிறது. தேனி-அல்லி நகரம் சாலையிலுள்ள அ.தி.மு.க. தேர்தல் அலுவலகத்துக்குச் சென்றோம். அங்கே இரண்டு மூன்று பேர்தான் இருந்தார்கள் என்பதால், அலுவலகமே சோர்வாகக் காணப்பட்டது.

"நாவலர் எங்கேயிருக்கிறார்?"– விசாரித்தோம்.




"அவர் இப்போது இங்கே வருவதாகத்தான் இருந்தது. இன்று தேனியில் சந்தை பாருங்கள். கூட்டம் அதிகம். அதனால் வரவேண்டாமென்று நாங்களே சொல்லி விட்டோம். அவர் ஆனந்த கிருஷ்ணா ஜின்னிங் பாக்டரியில்தான் தங்கியிருக்கிறார். அங்கே போய்ப் பாருங்கள்!" என்றார்கள்.

போனோம். விசிட்டிங் கார்டைக் கொடுத்து, நாவலருக்குச் சொல்லியனுப்பியபோது, "அவர் தேர்தல் முடியும்வரை பத்திரிகையாளர்களைப் பார்க்கப் போவதில்லையாம். தேர்தல் முடிந்த பிறகு பார்ப்பதாகச் சொல்கிறார்!" என்று பதில் வந்தது.

"அப்படியானால் எங்கள் புகைப்படக்காரர் ஒரேயொரு படம் எடுக்க விரும்புகிறார். போய்ச் சொல்லிப் பாருங்களேன். நாங்கள் உள்ளே வரமாட்டோம்... புகைப்படக்காரர் மட்டும்தான் வருவார்..."

அனுமதி கிடைக்க, ஒரேயொரு படம் மட்டும் எடுத்துக் கொண்டு வந்த நமது புகைப்படக்காரர், "நாவலர் முகத்தில் உற்சாகமேயில்லை. ஏதோ துக்கத்தில் இருப்பது போல்தான் இருக்கிறார்!" என்று நம் காதோடு கமெண்ட் அடித்தார்.

**வே**று வழியின்றி வெளியில் நின்றிருந்த வெகு சில கட்சிக்காரர்களிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்தோம்.

"நாவலருக்கு அப்படியொன்றும் எதிர்ப்பில்லீங்க. எல்லாம் இந்தப் பத்திரிகைக்காரங்க பண்ற வேலை. இத்தனைக்கும் தீபாவளி, பொங்கல் என்றால் பத்திரிகையாளர்களுக்கெல்லாம் ஆயிரம் ஆயிரம் என்று ரூபாயைக் கவரில் வைத்துக் கொடுப்போம்... (நாம் சென்ற பல இடங்களிலும் அதிகாரத்திலிருக்கும் ஆளுங்கட்சியினர் தொகுதிகள் என்றால் ஆயிரக்கணக்கான ரூபாய்களையும் மற்றவர்கள் அவர்களால் முடிந்த தொகைகளையும் கொடுத்தார்கள். மறுத்தபோது இதெல்லாம் எழுதத்தான் செய்கிறார்கள். ஓர் அமைச்சர், நாம் மீண்டும் ஜெயித்து பதவிக்கு வந்தால், உள்ளூர் பத்திரிகையாளர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு வீடு வாங்கித் தருவதாக வாக்குறுதியும் தந்திருக்கிறாராம். இதெல்லாம் நமக்கு அதிர்ச்சியாக இருந்தது!) அதனால்தான் நாவலரே ஒரு கூட்டத்தில் பேசும் போது, 'மனச் சாட்சிக்கு விரோதமா பொய்ச் செய்தி போடற பத்திரிகைக்காரங்க மாத்திரமல்ல; அவங்க குடும்பமே விளங்காம போயிடும்!' என்றார்... எல்லாம் போகப் போகச் சரியாயிடும்..." என்றார்கள்.

"நாவலருக்கு எதிர்ப்பே இல்லையென்றால் ஜின்னிங் பாக்டரிக்கு வெளியே எதற்கு ஏராள போலீஸ்?"

"பக்கத்துல தாங்க எஸ்.பி. ஆபீஸ். அவங்க நாவலருக்காக வந்தவங்க இல்லை. பக்கத்துல பெண்களைக் கேலி செஞ்சாங்கன்னு ஒரு பிரச்னை. அதுக்காக வந்தவங்கதான்... மெட்ராஸ்லிருந்து வந்திருக்கீங்க... வாங்க எளநி சாப்பிடலாம்..." என்று வற்புறுத்தி நம்மை வெளியே அழைத்துச் சென்றார்கள் கட்சிக்காரர்கள்.

இளநீர் சாப்பிடும்போது அருகிலிருந்த போலீஸ்காரர்களைப் பார்த்து, "நீங்க பக்கத்தூர்ல கலாட்டான்னுதானே வந்தீங்க... நாவலருக்குப் பாதுகாப்புக் கொடுக்கவா வந்தீங்க... இல்லையே..." என்று கட்சிக்காரர்கள் கேட்க, அந்த அப்பாவி போலீஸ்காரர் இவர்கள் கேட்டதன் உள் அர்த்தம் புரியாமல், "நாங்க எலெக்ஷன் வேலையாத்தானே வந்தோம்!" என்று கூற இவர்களின் பாடு தர்மசங்கடமாகி விட்டது!

மேலும் அவர்களை சோதனைக்குள்ளாக்காமல் நாம் விடை பெற்றுக் கொண்டு திரும்பினோம்.

பாவம், நாவலருக்கு இந்தத் தேர்தலிலும் இரண்டாவது இடம்தானா?

**— இளங்கோவன்**

# எந்த முகத்துடன் பெண்களிடம் அவர்கள் ஓட்டு கேட்கிறார்கள் ?



ஊழலுக்கு ஒத்துழைக்க மறுத்த
பெண் ஐ.ஏ.எஸ்.
அதிகாரி முகத்தில்
திராவக வீச்சு!

## இருக்கலாமா
## இப்படி ஓர் ஆட்சி ?

### தாய்மார்களே சிந்திப்பீர் !

குண்டர்களின் வெறியாட்டத்திற்குத்
தண்டனை வழங்க

**ஆதரிப்பீர்**  **உதயசூரியன்**

தி.மு.க. முற்போக்குக் கூட்டணியின் சின்னங்கள்










வாக்களிப்பது
உங்கள் உரிமை.
அந்த ஜனநாயகக்
கடமையை
நிறைவேற்றத்
தவறாதீர்.

வெளியீடு : தி.மு.க. தலைமை நிலையம், அண்ணா அறிவாலயம், சென்னை 600018.

**நாட்டைக் காப்போம்! நல்லாட்சி காண்போம்!!**

124 – ஆண்டுகளாக சேவையில்

# தி மயிலாப்பூர் இந்து சாசுவத நிதி லிட்

(அளவையுள்ளது) மத்திய அரசாங்க அங்கிகாரம் பெற்ற நிதி.
தலைமை அலுவலகம் : 32 33, தெற்கு மாட வீதி, மயிலாப்பூர்,
சென்னை – 4. ☎ : 4941099, 4941230, 4954016



**பிக்செட் டெபாசிட்டுகள் 19%**

| 3 மாதங்கள் | 6 மாதங்கள் | 1 ஆண்டு | 2 ஆண்டுகள் | 3 ஆண்டுகள் | 4 ஆண்டுகள் | 5 ஆண்டுகள் |
|---|---|---|---|---|---|---|
| 13% | 15% | 16% | 17% | 18% | 18½% | 19% |

**பிக்செட் டெபாசிட் மறுமுதலீட்டுத் திட்டம் 48-மாதங்களில் இரட்டிப்பாகிறது**

| டெபாசிட் தொகை ரூ | 12 மாதங்கள் ரூபாய் | 24 மாதங்கள் ரூபாய் | 36 மாதங்கள் ரூபாய் | 48 மாதங்கள் ரூபாய் | 74 மாதங்கள் ரூபாய் | 120 மாதங்கள் ரூபாய் |
|---|---|---|---|---|---|---|
| 1,000 | 1,180 | 1,400/- | 1,700/- | 2,040/- | 3,000/- | 5,960/- |
| 10,000 | 11,800/- | 14,000/- | 17,000/- | 20,400/- | 30,000/- | 59,600/- |

**கிளைகள் :**

| | | | |
|---|---|---|---|
| பார்க்டவுன் | ☎ 5353588 | அமைந்தகரை | ☎ 611306 |
| வண்ணாரப்பேட்டை | ☎ 5951346 | அடையாறு | ☎ 415241 |
| வேளச்சேரி | ☎ 2353856 | கோடம்பாக்கம் | ☎ 420871 |
| சைதாப்பேட்டை | ☎ 4850468 | அண்ணாநகர் | ☎ 6266205 |
| | | பெரம்பூர் | ☎ 619923 |

பங்குதாரர்களுக்கு மட்டும் - பங்கு விலை ரூபாய் 1 மட்டும்

# வட இந்திய சுற்றுலா

| | செல்லும் கிழமைகள் | கட்டணம் |
|---|---|---|
| 1. டெல்லி - பத்ரிநாத் - கேதார்நாத் - கங்கோத்ரி - யமுனோத்ரி - டெல்லி | ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் | ரூ. 2,300/-* |
| 2. டெல்லி - பத்ரிநாத் - கேதார்நாத் - டெல்லி | ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் | ரூ. 1,300/-* |
| 3. டெல்லி - அலகாபாத் - வாரணாசி - கயா - அயோத்தியா - ரிஷிகேஷ் - டெல்லி | ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் | ரூ. 2,000/- |
| 4. டெல்லி - சிம்லா - குலு - மனாலி - சண்டிகர் - டெல்லி | ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் | ரூ. 2,000/- |
| 5. டெல்லி - ஆக்ரா - ஜெய்ப்பூர் - ஆஜ்மீர் - புஷ்கர் - டெல்லி | ஒவ்வொரு வியாழக்கிழமையும் | ரூ. 650/- |
| 6. டெல்லி - முசௌரி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - டெல்லி | செவ்வாய் / வெள்ளி | ரூ. 400/- |

ஹாலில் தங்கும் வசதி, பஸ் மற்றும் கைடு வசதிகள் சேர்ந்த கட்டணம்.
* தென்னிந்திய சைவ சாப்பாடு சுற்றுலாவின் போது தனிக் கட்டணத்தில் அளிக்கப்படும். நாங்கள் மத்திய அரசு ஊழியர்களுக்கு ITDC-யுடன் இணைந்து LTC சுற்றுலாக்களை ஏற்பாடு செய்கிறோம். எல்லாச் சுற்றுலாக்களும் சூப்பர் டீலக்ஸ் பஸ்கள் மூலம் எங்கள் புது டெல்லி அலுவலகத்திலிருந்து ஆரம்பமாகும். முன்பதிவிற்கு எங்கள் அலுவலகங்களுடன் தொடர்பு கொள்ளவும்:

*சென்னை : 585253 / 564864; ஐதராபாத் : 227233/223658; பெங்களூர் : 2262633; விசாகப்பட்டினம் : 545565; விஜயவாடா : 62227; டெல்லியில் ஹோட்டல் சதர்னில் தங்குங்கள்.*

முக்கியமான இடத்தில் நவீன வசதிகளுடன் ஏசி, மற்றும் நான்-ஏசி ரூம்கள்; குழுக்களாக வருபவர்களுக்கு தங்குவதற்கு ஹால்கள்; டெல்லியிலே சிறந்த தென்னிந்திய சாப்பாடு கிடைக்குமிடம் சுப்ரபாத் ரெஸ்டாரண்ட். பிராமண சமையல்காரர்கள். STD / FAX வசதி ஏசி டைனிங் ஹால். டெல்லி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து இலவசமாக அழைத்துச் சென்று திரும்பக் கொண்டு வந்து விடுகிறோம். சுப்ரபாத்தின் நடமாடும் உணவகம் பத்ரி, கேதார், கங்கோத்ரி மற்றும் யமுனோத்ரியில் சுவைமிக்க சைவ உணவை உங்களுக்கு அளிக்கிறது.

## சதர்ன் டிராவல்ஸ் / ஹோட்டல் சதர்ன்

*இந்திய அரசு சுற்றுலாத்துறை, டெல்லி அவர்களின் அங்கிகாரம் பெற்றது.*

18/2, Arya Samaj Road,
W.E.A. Karol Bagh,
New Delhi - 110 005.
Tel : 5739506 / 5722210 / 5724085.

Hotel Howrah Complex Basement,
Poonamallee High Road,
Opp. Central Suburban Railway Station,
Madras - 600 003.Tel : 585253 / 564864.

ASPIRATION/ST/1053





கணேசமூர்த்திமேல் ஒரு புகார். அவர் தி.மு.க.விலிருந்த போது வசூலித்த தேர்தல் நிதியைக் கட்சிக்குத் தராமலேயே ம.தி.மு.க.வுக்குச் சென்று விட்டார் என்று சொல்கிறார்கள். இப்படியொரு புகார் இல்லாவிட்டாலும்கூட கணேசமூர்த்தியால் ஈரோடு தொகுதியில் வெற்றிபெற முடியாது என்கிற நிலையில், அமைச்சர் முத்துசாமிக்குச் சரியான போட்டியாக இருப்பவர் தி.மு.க. வேட்பாளரான பெரியசாமிதான்!

பெரியசாமியின் 'கருணாம்பிகா என்டர்பிரைசஸ்' கம்பெனியின் பேரில் அவருக்குத் தெரியாமலேயே இலவச வேட்டி - சேலை தொடர்பான ஊழலை அ.தி.மு.க.வினர் செய்தார்கள்! அதை முதலில் கண்டுபிடித்து வெளிக் கொணர்ந்தவரும் பெரியசாமிதான் என்பதால், இவருக்கு இயற்கையாகவே ஒரு பிளஸ் பாயிண்ட் கிடைத்து விட்டது. அதனால்தான் 77-ல் நின்று தோற்றுப் போன இவர், இப்போது தைரியமாகக் களத்தில் குதித்திருக்கிறார்!

"சாதாரணமாகவே அமைச்சர் முத்துசாமி பேரில் ஈரோட்டு மக்களுக்குப் பரவலான நல்லெண்ணம்தானே இருக்கிறது?" - பெரியசாமியிடம் கேட்டோம்.

"இந்த ஆட்சியின் ஊழல் அதைவிட அதிகமாக இருக்கிறதே... என்ன நடக்குதுன்னு மக்களுக்குத் தெரியாதா என்ன? 5004 கல்யாணம் நடந்ததே, எப்படின்னு தெரியுமா? உள்ளாட்சித் துறை அமைச்சர், ஒவ்வொரு பஞ்சாயத்திலும் பணம் எடுத்திருக்கிறார். இங்குள்ள வீரப்பன் சத்திரம் பஞ்சாயத்துல இரண்டு லட்சமும் கவுந்தப்பாடி பஞ்சாயத்துல ஐம்பதாயிரமும் கொடுத்திருக்காங்க. இதுக்கெல்லாம் என்ன கணக்கு? செய்யாத வேலைகளையெல்லாம் செய்ததாக எழுதித்தான் கணக்குக் காட்டறாங்க...

"அப்புறம், முத்துசாமி சுகாதார அமைச்சர். ஆனா ஈரோட்டிலிருக்கிற மருத்துவமனையில எல்லா மருந்தும் இருக்கா? போய்க் கேட்டா பல மருந்துங்க இல்லேன்னுதான் பதில் வருது. அப்படின்னா மருந்தே வாங்கறதில்லையா, இல்லே... வாங்கின மருந்து வேறெங்கும் போவுதா?

"இன்னொண்ணும் சொல்றாங்க... ஈரோட்டுல கலெக்டர் ஆபீஸ் வர்றதுக்கும் அப்படியொரு கட்டடம் கட்டறதுக்கும் முத்துசாமிதான் காரணமுன்னு... எந்த மாவட்டத்தைப் பிரிச்சாலும் புதுசா கலெக்டர் ஆபீஸ், கட்டடம் எல்லாம் வந்துதானே ஆகணும்! இதுல முத்துசாமிக்கு என்ன தனிப்பட்ட பெருமை?

"இதையெல்லாம்தான் நாங்க மக்களிடம் எடுத்துச் சொல்லிக்கிட்டிருக்கோம். இன்னொரு விஷயம்... முத்துசாமியும் ஒரு விவ



• முத்துசாமி

• பெரியசாமி

# முத்துசாமியை எதிர்க்கும் பெரியசாமி!

சாயிதான். இங்கே முக்கிய விவசாயப் பயிர் மஞ்சள்தான். இந்த நிலையில் மஞ்சள் பயிரிடும் விவசாயிங்களுக்காகவும் மஞ்சள் விற்பனைக்காகவும் வியாபாரிகளுக்காகவும் இந்த முத்துசாமி இதுவரைக்கும் ஏதாவது செஞ்சிருக்காரா... நெஞ்சைத் தொட்டு அவரால சொல்ல முடியுமா? அதனால வெற்றி எங்களுக்குத்தான்!" என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறார், பெரியசாமி.

என்றாலும் முத்துசாமிக்குத் தம் தொகுதி மக்களின்மேல் ஏகப்பட்ட நம்பிக்கை. அதனால்தான் தமது தொகுதியில் தமக்காக வோட்டுக் கேட்கத் தமக்கு வேண்டியவர்களை அனுப்பி வைத்துவிட்டு, தாம் ஜெயலலிதாவோடு தேர்தல் பிரசாரத்துக்குச் சென்று கொண்டிருக்கிறார். அவரது நம்பிக்கை ஜெயிக்குமா? பொய்க்குமா? ஈரோட்டு மக்களின் விழிப்புணர்ச்சியைப் பொறுத்த விஷயம் அது!

— எஸ். குணா

கூடத்தில் சேர் போட்டு பேப்பர் பார்த்துக் கொண்டிருந்தார், ராகவன்.

அவரைத் தாண்டித்தான் வாசலுக்குப் போக வேண்டும் சங்கரி.

பேசாமல் தாண்டிப் போக முடியாது. ஏதாவது சொல்ல வேண்டும். சொல்லா விட்டாலும் அவரும் விடப் போவதில்லை. கேட்டு அனுப்பித்தான் பழக்கம். புதிதா என்ன! வழக்கமா?

வழக்கம்தான். இருபத்திரண்டு வருடங்கள் மாறாமல் இப்படித்தான்.

இதுவரை சங்கரிக்கு அப்படியொரு சந்தர்ப்பம் நேர்ந்ததில்லை. நேரும் எனவும் எதிர் பார்க்கவில்லை. நேர்ந்துவிட்டது. சந்தித்துத் தானே ஆக வேண்டும்?

காரணம் வசுமதி.

அவளின் காதல்.

காதலின் பொருட்டு வசு, ராகவனை உதறிய துணிச்சல்.

அது மட்டுமா?

நாலைந்து தெருக்கள் தள்ளி, மார்க்கெட் போகிற பாதையில் தனிக்குடித்தனம் வேறு!

ராகவன்தான் தினமும் மார்க்கெட் போவார்.

போகும்போது பார்வையில் படும் முகம்.

தவிர்க்க முடியாது.

மார்க்கெட் போவதைத் தவிர்த்துவிடலாம்.

முடியாது ராகவனால்.

பென்ஷன் வாங்கும் சூழலில் காலையில் மார்க்கெட், லைப்ரரி, மதியம் வீட்டில் தூக்கம், மாலையில் கடைத்தெரு அல்வா, மிக்சர். இரவு தூங்கப் போகும் வரை டீ.வி.

விட்டால் மனுஷன் செத்துப் போகக்கூடும்.

ஒரே பெண். ஏராளமான கௌரவம். உடைத்து தூசாக்கி ஊதிவிட்டுப் போய்விட்டாள் வசுமதி.

இப்படித்தான் எண்ணம் ராகவனுள்.



"ஏதுவும் வேண்டாம் போயிடு! பொண்ணு இல்லை, செத்துப் போயிடிச்சுன்னு நினைச்சுக்கறேன்!"

"இல்லேப்பா, நீங்க மாறுவீங்க! காத்திருக்கேன்!"

"காத்திரு! காத்திரு! எப்படியும் மார்க்கெட் வழியாத் தானே சுடுகாடு போகணும்! என் பொணத்தைப் பார்க்கலாம்!"

வாய் பொத்தி அழுதாள் சங்கரி.

எல்லாம் பார்த்து, பேசாது வெளியே போனாள் வசுமதி.

சங்கரி உடை மாற்றி, கிளம்பினாள். முன் கூடம் வந்தாள். ராகவன் பேப்பரை

# மான்குட்டி
# மனைசு



ஹரணி

விட்டுக் கண்களை எடுத்தார்.

"மேலத் தெருவிலே வாசுகி மகளுக்குக் கல்யாணம். போயிட்டு வரேன்!"

"அதுக்கு ஏன் இத்தனை நகை?"

"கல்யாண வீட்டுக்குப் பிச்சைக்காரியாட்டமா போக முடியும்?"

"பை எதுக்கு?"

"பட்டுப்புடைவை. தேய்க்கணும். போற வழி தானே கடை? கொடுத்திட்டுப் போகலாம்னு!"

"எப்போ வருவே?"

"உங்களுக்கு சமைச்சு ஹாட் பேக்லே எடுத்து வச்சிட்டேன்! மதிய சாப்பாடு முடிச்சிட்டுத்தான் வருவேன்! இல்லாட்டி வாசுகி வருத்தப்படுவா! உங்களையும் வரச் சொன்னா!"

"சரி! கதையை விடு... போயிட்டு வா!"

வாசல் தாண்டியதும் உடன் மகிழ்ச்சி வந்து பரவியது சங்கரிக்கு.

முதலில் மார்க்கெட் வழியாகப் போய் வசுமதி வீட்டுக்குள் நுழைந்தாள். வசுமதி சங்கரியைப் பார்த்ததும் அழுதாள்.

"வாம்மா!" என்றாள்.

"எங்க மாப்பிள்ளே?"

"வெளியே போயிருக்கார்!"

"வேலை என்ன ஆச்சு?"

"பார்த்திட்டிருக்காரு. எல்.ஐ.சி ஏஜெண்ட். கொஞ்சம் பிஸினஸ் செய்யறார். கஷ்ட ஜீவனம் இல்லே! சரியாக இருக்கும்மா!"

வசுமதியைக் கூர்ந்து கவனித்தாள். வயிறு சிறிது மேடிட்டிருந்ததைக் கவனித்தாள்.

"இது எத்தனை?"

"இரண்டும்மா!" என்றதும் கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டாள். பின், சட்டென்று தன் கழுத்தில் போட்டிருந்த தாலிச் சங்கிலி தவிர எல்லாவற்றையும் கழற்றிப் போட்டாள். கைகளில் இருந்து நான்கு வளையல்கள், இரண்டு மோதிரங்கள்.

"இந்தா வசுமதி! எல்லாத்தையும் எடுத்துக்கோ."

"ஏம்மா...?"

"இது உனக்குன்னு செஞ்சது. உனக்குத்தான் சொந்தம்! யாரும் உரிமை கொண்டாட முடியாது! பெத்த அப்பாவா இருந்தாலும்!"

வசுமதிக்குப் புரிந்தது. எடுத்துக் கொண்டாள்.

"அப்பா எப்படிம்மா இருக்காரு?"

"அவருக்கென்ன, ராஜா!"

"சுகர் மாத்திரை ஒழுங்காச் சாப்பிடறாரா அப்பா?"

"அதெல்லாம் கரெக்டா! கவலையை விடு! எப்படி, அன்பா வச்சுக்கிறாரா?"

"நான் விரும்பி வந்த வாழ்க்கைம்மா! குறை சொல்ல மாட்டேன்! ஆனால் உண்மையிலே



## மாற்றம்?

அந்தக் கட்சியிலிருந்து
இந்தக் கட்சிக்கும்
இந்தக் கட்சியிலிருந்து
அந்தக் கட்சிக்கும்
எங்கள் அரசியல்வாதிகள்
மாறிக் கொண்டுதான்
இருக்கிறார்கள்...
ஆனால் இன்னும்
மாறவில்லை
மனிதர்களாய்...!

- பி. சி. ரகு

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

எந்தக் குறையும் இல்லேம்மா!"

பேசிக் கொண்டிருந்துவிட்டுக் கிளம்பினாள் கல்யாண வீட்டுக்கு.

"அடிக்கடி வாம்மா!" என்று வழியனுப்பி வைத்தாள்.

திரும்பி வந்தபோது வாசலில் நின்று கொண்டிருந்தார் ராகவன்.

சட்டென்று ஒரு பயம் மனசைக் கவ்வியது.

நகைக்குக் கேட்கப் போகிறார் மனுஷன்! பிரச்னைதான். நாமே பேசிவிடலாம் என எண்ணிப் பேசினாள்.

"எங்கே நகைன்னுதானே பார்க்கறீங்க? எனக்கும் ரோஷம் இருக்குங்க! நாம சம்பாதிச்சு வச்சாலும் அந்தக் கழுதைக்குச் செஞ்ச நகைதானே! அது எதுக்கு நமக்கு? அதுக்குன்னு உள்ள எதுவும் இந்த வீட்டுலே' இருக்கக் கூடாதுன்னு கழட்டி இந்தான்னு எறிஞ்சிட்டேன், எனக்கு எம் புருஷன் பென்ஷன் போதும்னு!" படபடவென்று பேசி முடித்தாள்.

ராகவன் எதுவும் பேசவில்லை.

"நான் செஞ்சது தப்பாங்க?" என்றாள் மறுபடியும்.

ராகவன் பேசினார்.

"சங்கரி, நீ செஞ்சது சரிதான். அவளுக்கு உள்ள எதுவும் இந்த வீட்டிலே இருக்கக் கூடாது. அவ பேர்ல போட்டிருந்த ரெண்டு மூணு ஆர்.டி மெச்சூர் ஆச்சு. அந்தப் பணம், அப்புறம் இந்திரவிகாஸ் பத்திரம், எப்.டி பாண்டு, எல்.ஐ.சி பாண்டுன்னு அவ பேர்ல உள்ள எல்லாத்தையும் நமக்கு வேண்டாம்னு ஒர் ஆள் மூலம் கொடுத்தனுப்பிச்சிட்டேன் ஒழிஞ்சி போன்னு!"என்றார்.

சங்கரி அவரைப் பார்க்க, தலையைக் குனிந்து கொண்டார்.

### 'சுருக் நறுக்' போட்டி - 25 - முடிவுகள்

## பயணம் என்பது...

● கூடவே ஓடிவரும் பல்கலைக்கழகம்!

- ரா. சிதம்பரம், மதுரை - 19.

● சிலருக்கு வாழ்க்கையின் வசந்தம்; பலருக்கு வாழ்க்கையின் நிர்ப்பந்தம்!

- எல். சண்முகசுந்தரி, இராமநாதபுரம் -1.

● முடிவுறாத சாலையில் மூச்சிரைக்கும் பேருந்தில் முகம் புதைக்கும் அனுபவம்.

- ஜெ. கல்யாணி, சென்னை - 88.

● வீட்டின் அருமைகளை உணர்த்துவது!

- ஆர். ஸ்ரீநிவாசன், திருச்சி - 6.

● தேடல் நிமித்தம், திரவிய நிமித்தம் திக்கெட்டு சென்றாலும் தேடாததையும் திவ்யமாய்க் கொண்டு வருவது.

- கா.சு.வே. ரோகிணி, கோவை - 16.

● முடியாமல் முடியும் தொடர்கதை; புரியாமல் புரியும் விடுகதை!

- கே. வெங்கடேசன், வேலூர் - 4.

● வாழ்க்கைச் சகாராவில் வசந்தச் சோலையைத் தேடும் முயற்சி!

- மூ. மோகன், ஜோலார்பேட்டை.

# இலவச வேட்டி சேலையிலும் கொள்ளையா ?
# இதைத் தட்டிக்கேட்க யாருமே இல்லையா ?



## ஊழல் பெருச்சாளிகளை விரட்டிடுவோம்!
## தமிழ்நாட்டு மக்களைக் காத்திடுவோம் !

ஆதரிப்பீர்  உதயசூரியன்




தி.மு.க. முற்போக்குக் கூட்டணியின் சின்னங்கள்







வாக்களிப்பது உங்கள் உரிமை. அந்த ஜனநாயகக் கடமையை நிறைவேற்றத் தவறாதீர்.

வெளியீடு : தி.மு.க. தலைமை நிலையம், அண்ணா அறிவாலயம், சென்னை 600018.

**நாட்டைக் காப்போம் ! நல்லாட்சி காண்போம் !!**

# சிறுகதை தேர்வுக் கூப்பன்

ஏப்ரல் மாதத்தில் வெளியான (7.4.96 இதழிலிருந்து 28.4.96 இந்த இதழ் வரை) சிறுகதைகளில் மிகச் சிறந்ததென நீங்கள் எதைக் கருதுகிறீர்கள்?

கீழுள்ள கூப்பனில், சிறுகதையின் தலைப்பு, ஆசிரியர் பெயர், மற்றும் நீங்கள் அதைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தையும் சுருக்கமாக- இரண்டே வரிகளில் எழுதி அனுப்புங்கள்.

உங்கள் கணிப்பில் தேர்வாகும் சிறந்த சிறுகதை ஆசிரியருக்கு ரூ.500/- பரிசு. சிறந்த கதையாகத் தேர்ந்தெடுப்பதற்கான காரணத்தை, மிகச் சுருக்கமாக அதே சமயம் சிறப்பாக எழுதும் ஒரு வாசகருக்கு ரூ.100 பரிசு!

இம்மாதக் கூப்பன் அனுப்பக் கடைசித் தேதி : 8.5.96.

## ஏப்ரல் மாத சிறுகதைத் தேர்வுக் கூப்பன்

சிறந்த சிறுகதை: ..........................................

..........................................

கதாசிரியர் பெயர் : ..........................................

தேர்ந்தெடுக்கக் காரணம் : ..........................................

..........................................

..........................................

..........................................

என் பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................



• தெய்வ நாயகம்

# மக்களைக் கவருமா மணிச்சப்தம்?

தெருவில் கிணி கிணியென்று மணியோசை கேட்கிறது. கூடவே ஸ்பீக்கரில், "நல்லவர்களுக்கே உங்கள் வோட்டைப் போடுங்கள். உங்களைத் தேடி உதயமூர்த்தி வருகிறார்..." என்று அறிவிப்பு.

ஜீப்பில் நின்றவாறு கைகூப்பி மதுரை தெருக்களில் வோட்டு வேட்டையாடி வருகிறார் மக்கள் சக்தி இயக்கத்தின் தலைவர் டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி.

"எங்களுக்கு நல்ல வரவேற்பு இருக்கு. முகம் தெரியாத பலர் எங்களுக்காக உதவி செய்யறாங்க! அரசியல் கட்சிகள் என்றாலே மக்களுக்கு வெறுப்பு! ஒரு புதிய கலாசாரத்தை மக்கள் எதிர்பார்க்கிறார்கள். அதைக் கொடுப்பதே எங்கள் லட்சியம். மதுரை ஒரு வர்த்தக நகரமாக இருக்கிறதே தவிர, உற்பத்தி நகரமாக இல்லை! பல மூலப் பொருட்களை உற்பத்தி செய்யும் நகரமாக மாற்றினால் நூற்றுக்கணக்கானவர்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கும். இதைச் சொல்லித்தான் நாங்கள் வோட்டு கேட்கிறோம்" என்றார் டாக்டர் உதயமூர்த்தி.

தங்கள் இயக்கத்தின் சின்னமான மணிச் சின்னம் ஒதுக்கப்பட்டதில் இயக்கத்தினருக்கு ஏக சந்தோஷம். இந்த மணிச்சப்தம் மக்களை எந்த அளவுக்குக் கவரும் என்பது தெரியவில்லை. காரணம், இவரை எதிர்த்து நிற்பவர்கள் இன்னும் நான்கு பேர்!



கடந்த இரண்டு முறை எம்.எல்.ஏ.வாக இருந்த தமிழ் மாநில காங்கிரஸ் வேட்பாளர் ஏ. தெய்வநாயகத்துக்கு தமது சாதனைகளைச் சொல்லி வோட்டு கேட்பதை விட, அ.தி.மு.க. ஆட்சியின் அவலங்களைச் சொல்லி வோட்டு கேட்பது சுலபமாக இருக்கிறது. "சுமார் ஒரு கோடி ரூபாய், சிறு வர்த்தகர்களுக்கு கடனாகப் பெற்றுத் தந்துள்ளேன். அலுப்பானடி கால்வாயைச் சீரமைத்து, பக்கச் சுவர்களைக் கட்டியுள்ளேன்" என்றார் நம்மிடம்.

"எல்லீஸ் நகர், திடீர் நகர் போன்ற பகுதிகளில் உள்ள சுகாதாரச் சீர்கேட்டைப் போக்க நீங்கள் எதுவும் செய்யவில்லையாமே?"

"அதெல்லாம் ஹவுசிங் போர்டு ஏரியாக்கள். எவ்வளவோ முறை சொல்லியும், அதிகாரிகள் கேட்கவேயில்லை. மக்களுக்கு இந்த விவரம் புரியும்" என்று சொன்னார் தெய்வநாயகம்.

இடது கம்யூனிஸ்ட் வேட்பாளர் நன்மாறன் ரொம்பவும் சிம்பிளாக மூன்று சக்கர சைக்கிளில் பிரசாரம் செய்கிறார். "ஜெயலலிதா, தமக்கும் கருணாநிதிக்கும்தான் போட்டி என்கிறார். உலகக் கோப்பை கிரிக்கெட்டில் இந்தியாவும் பாகிஸ்தானும்தான் இறுதியில் மோதும் என்றார்கள். ஆனால் இடையில் புகுந்த இலங்கை, கோப்பையைத் தட்டிக் கொண்டு சென்று விட்டது. அது போல இந்தத் தேர்தலில் அ.தி.மு.க., தி.மு.க. ஆகிய இரண்டு கட்சிகளையும் மக்கள் துரத்தி விட்டு, ம.தி.மு.க., இ. கம்யூனிஸ்ட் கூட்டணியை வெற்றிக் கூட்டணியாக மாற்றப் போகிறார்கள்" என்று சுப்பிரமணியபுரத்தில் பேசும் போது சொன்னார் நன்மாறன்.

மதுரை மத்திய தொகுதியின் நிலவரம்தான் என்ன? ஜனதா கட்சி வேட்பாளரான சந்திரலேகாவோ, மதுரை எம்.பி. தொகுதியில் சுவாமி போட்டியிடுவதால் அவருடன் வோட்டு வேட்டையாட, சுற்றுவட்டாரத் தொகுதிகளுக்குச் சென்று விடுகிறார். லோக்கல் அ.தி.மு.க.வினர், ராவ் காங்கிரஸ் வேட்பாளரான தங்கராஜுக்கு வேலை செய்யாமல் டிமிக்கி கொடுக்கிறார்கள்.

இந்த நிலையில் சைக்கிள் சின்னத்துக்காக ரஜினி ரசிகர்கள்தான் மிகவும் உற்சாகமாக ஓடியாடி உழைக்கிறார்கள். ஜெ. எதிர்ப்பு அலையும் பலமாக அடிப்பதால், மதுரை மத்திய தொகுதி அண்ணாமலை சைக்கிளுக்கே அமோக ஆதரவைத் தெரிவிக்கும் போல் இருக்கிறது!

- தில்லப்பா



• எம்.எஸ். உதயமூர்த்தி



• சந்திரலேகா



**கவர் ஸ்டோரி**

• புதிய யுக்தி...



# 'ஜெ'யின் கோடிகள்... சிதம்பரம் கேள்விகள்...

*சென்னை–மயிலாப்பூர் கனரா வங்கிக் கிளையொன்றில் ஜெயலலிதாவின் சேமிப்புக் கணக்கில் கோடி கோடியாகப் பணம் டெபாஸிட் ஆகியிருக்கிறது என்பதைச் சுட்டிக்காட்டி, அது தொடர்பாக ஏழு கேள்விகளை எழுப்பிய ப. சிதம்பரம், தமது பிரசாரத்தின் போதும் கேள்வி கேட்பதைத் தொடர்கிறார். அந்தக் கேள்விகள் வாக்காளர்களைச் சிந்திக்க வைக்கும் கேள்விகளாக அமைந்துள்ளன!*

"கம்மலையும் மூக்குத்தியையும் வித்து கட்சியை நடத்தறோம்னு அந்தம்மா சொன்னாங்களே...? அவங்களுக்கு 1995 ஆம் வருஷம் மட்டும் எப்படி 38 கோடி ரூபாய் கிடைச்சுது...? 38 ஆயிரம் இல்ல... 38 லட்சம் இல்ல... முப்பத்தெட்டுக் கோடி...." என்று அழுத்திச் சொல்லி, "எப்படிக் கிடைச்சுது...?" என்று அடித்துக் கேட்கிறார், ப. சிதம்பரம்.

சிவகங்கைத் தொகுதியின் ஒரு கிராமம்... திருப்பத்தூர் – காளாப்பூர் சாலைகள் சேருமிடத்தில் ஜீப் மீது நின்று கேட்கிறார் சிதம்பரம்.

கேட்ட கேள்விக்குத் தாமே பதிலும் சொல்கிறார் :

"அந்தம்மாவே தனக்குப் பணம் கிடைச்சதை அரசாங்கத்துக்கிட்ட ஒப்புக்கிட்டிருக்காங்க. அதெல்லாம் ஊழல் பணம். உங்களுக்கு நன்மை செய்யறதுக்குப் பதிலா கோடி கோடியா சேர்த்துக்கிட்டாங்க! இப்ப நாங்க எழுப்பற ஊழல் குற்றச்சாட்டுகளுக்குப் பதில் சொல்ல முடியாம, வேற எதையெல்லாமோ பேசிக்கிட்டிருக்காங்க..."

எதிரில் சளசளவென்று பேசும் பெண்களை நோக்கிச் சொல்கிறார் சிதம்பரம் :

"ஏம்மா! என்ன அவ்வளவு முக்கியமான பேச்சு? ஆரத்தி

இன்னைக்கும் எடுக்கலாம்; நாளைக்கும் எடுக்கலாம்... ஆனால் வோட்டு ஐந்து வருஷத்துக்கு ஒருமுறைதான் போட முடியும்... இப்படிக் கொஞ்சம் கேளுங்க; நல்லா கேட்டுக்கங்க... நீங்க விழிப்பா இருக்கணும். அதிமுக. ஆட்சி நீடிக்க வேண்டுமா...?''

கூட்டம் அமைதியாகிறது.

''உதயசூரியன் சின்னத்துலயும் சைக்கிள் சின்னத்துலயும் வோட்டுப் போடுங்க; எனக்கு வோட்டுப் போட்டீங்கன்னா உலகப் பொருளாதார அரங்குல ஒரு வேட்டி கட்டின தமிழனோட குரல் ஒலிக்கும்... நம்ம சின்னம் சாதாரணச் சின்னம் இல்லை - ரெக்கை கட்டிப் பறக்கிற அண்ணாமலை சைக்கிள் அது...''

இளசுகள் கை தட்டுகிறார்கள்.



முறையூர் என்ற கிராமத்தில் தொண்டர்கள் சிதம்பரத்தை மொய்க்கிறார்கள். ஊர் முழுக்க வோட்டுக் கேட்க வர வேண்டும் என்கிறார்கள். ''நான் பாராளுமன்றத் தொகுதி வேட்பாளர். ஆறு தொகுதியும் போகணும். எல்லாத்துக்கும் நேரம் வேணுமே...'' என்று அன்பு கலந்த கண்டிப்போடு மறுக்கிறார்.

• காத்திருக்கும் மக்கள்



புறப்படுகிற நேரத்தில் மீண்டும் கேள்விகளைத் தொகுத்து விட்டுப் போகிறார் :

"ஒரு கல்யாணத்துக்கு உங்க ஊர் அமைச்சர் (கண்ணப்பன்) இரண்டாயிரம் ரூபாய் மொய் எழுதறாரு... அவருடைய சம்பளமே 2500 ரூபாய்தான். நீங்க இதைப் பற்றி யோசிக்க வேண்டாமா? பிரமிச்சுப் போய் பார்க்கறீங்களே...? மக்களுக்கு நன்மை செய்ய ஒதுக்கப்பட்ட பணத்தை அபகரிக்கறதாலதானே இது போல இரண்டாயிரம் ரூபாய் மொய் எழுத முடியுது...?"

மக்களின் மௌனத்தைக் கலைக்கிறது அவருடைய அடுத்த கேள்வி :

"என்னுடைய சின்னம் எது...?"

"சைக்கிள்! சைக்கிள்!" என்று உற்சாகமாகப் பதில் வருகிறது.

சிவகங்கைத் தொகுதியில் வாக்காளர்களின் மனத்தில், சிதம்பரத்துடன் சைக்கிள் சின்னமும் இவ்வளவு தூரம் இடம் பிடித்துள்ளதற்குக் காரணம், முன்னாள் அமைச்சரின் திறமையான பிரசார யுக்திகள். அவரை இன்னமும் 'எங்க மந்திரி' என்றுதான் தொகுதிக்காரர்கள் அழைக்கிறார்கள். சின்னஞ் சிறுவர்கள் கூட அவரை அறிந்திருக்கிறார்கள்.

எனினும் பணப் பற்றாக்குறை என்பது இந்தத் தமிழ் மாநில காங்கிரஸ் வேட்பாளருக்கு ஒரு மைனஸ் பாயிண்ட்.

"இங்க இருநூறு பேர் வேலை செய்யறோம்... எங்க செலவுக்கு ஐந்நூறு ரூபாய்தான் கொடுத்திருக்கிறார்... எப்படிக் கட்டுப்படியாகும்?" என்கிறார்கள் சில தொண்டர்கள்.

கொட்டாம்பட்டி அருகே மேல்பட்டி என்ற கிராமத்துக்குக் காலை பத்து மணிக்கு வர வேண்டியவருக்காக நெடுநேரம் காத்திருந்து, ஏமாற்றத்துடன் ஆரத்திக் கரைசலைக் கொட்டிவிட்டுப் போகிறார்கள் சில பெண்கள். இவருக்கு ஆரத்தி எடுக்க வாய்ப்புக் கிடைத்தால் அ.தி.மு.க.காரர்களிடம் கிடைப்பது போல் சுளை சுளையாக நோட்டு கிடைக்காது என்று தெரிந்தால், மேலும் ஏமாற்ற முற்றிருப்பார்கள்!

சின்ன பிரச்னைகள் இருந்தாலும் சிவகங்கையில் சைக்கிள் சின்னம் அங்கங்கே விளக்கொளியில் ஜொலித்துக் கொண்டிருக்கிறது.

எனினும், கடந்த மூன்று தேர்தல்களிலும் தொடர்ந்து வெற்றி பெற்ற சிதம்பரத்துக்கு இந்தத் தேர்தல் புது அனுபவம். அவரை எதிர்த்து ஒன்பது பேர்! உண்மையான போட்டி அவருக்கும் ராவ் காங்கிரஸ் வேட்பாளர் கௌரி சங்கருக்கும். கௌரி சங்கரும் சிவகங்கைக்காரர். ஆனால் சென்னையில் வசிக்கும் கிரானைட் தொழிலதிபர். அமைச்சர் கண்ணப்பனின் ஆதரவுடன் களத்தில் இருப்பவர்.

எனினும் ஏற்கெனவே மும்முறை வென்ற பலமும் மக்களிடையே நல்ல பெயரும் சிதம்பரத்துக்கு அனுகூலங்கள். போதாக்குறைக்கு 'ஜெ'யின் கோடிகள் குறித்து இவர் ஆங்காங்கே எழுப்பி வரும் கேள்விகள், மக்களை உண்மையிலேயே சிந்திக்க வைத்துக் கொண்டுதான் இருக்கின்றன.

**- ப்ரியன்**

அட்டை (ப.சிதம்பரம்) வண்ணப்படம் :
**ஸ்கார்ப் நியூஸ்**



"அரசியலில் நிரந்தர எதிரியும் இல்லை; நிரந்தர நண்பனும் இல்லைன்னு சொல்றாங்களே... அப்படின்னா அதுல நிரந்தரமா இருக்கிறது என்னங்க?"

"ஊழல்தான்!"

—ஆலத்தம்பாடி ராஜகோபால்

"என் மருமகள் எனக்கு ஒரு நியாயம் சொல்லுவா. அவளுக்குன்னா அதையே தலைகீழா மாத்திடுவா."

"என்ன நடந்தது?"

"எனக்குத்தேமல் வந்தப்ப 'அழுக்குத் தேமல்'னு சொல்லி பரிகாசம் பண்ணினா. இப்ப அவளுக்கு தேமல் வந்திருக்கு. அதை 'அழகுத் தேமல்'னு சொல்லி பெருமைப்பட்டுக்கிறா!"



## மெய்சிலிர்த்த அனுபவம்!

# என்னை மறந்தேன்!

**நா**ன் தில்லி பல்கலைக் கழகத்தின் 'மைக்ரோ எலக்ட்ரானிக்ஸ்' பிரிவில் ஒரு ஆராய்ச்சி மாணவன். கிடைக்கும் ஓய்வு நேரத்தில் அவ்வப்போது கோவிலுக்குச் செல்வதுண்டு. அப்படி ஒருநாள் தில்லியிலிருக்கும் 'ஸ்வாமி மலை மந்திர்' சென்றிருந்தேன். அன்று முருகனுக்கு திருக்கல்யாணம். அந்த ஆனந்தப் பிரவாகத்தில் திளைத்துக் கொண்டிருந்தவர்களில் நானும் ஒருவனாக ஓர் ஓரமாய் அமர்ந்தேன். திருக்கல்யாணம் முடிந்து, ஸ்வாமி தம்பதி சமேதராய் உலா வர ஆயத்தம் தொடங்கியது. திடீரென்று ஒரு பெரியவர் ஓரமாய் அமர்ந்திருந்த என்னைப் பார்த்து, "தம்பி... கொஞ்சம் பல்லக்குத் தூக்குவதற்கு வாருங்கள்" என்றார்.

இயல்பாகவே கோவிலுக்குச் சென்றால், சிலரைப் போல் ஸ்வாமியை 'வேரோடு பிடுங்கும்' ரகமல்ல நான். தீபாராதனை நடக்கும் போது கூட கூட்டத்திற்கிடையே முண்டியடித்துக் கொண்டு அந்தத் திருக்காட்சியினைக் கண்கள் வழியே பருகுவதற்குப் பதில் ஓரமாய் நின்று மனத்தினுள் அக்காட்சியினை உருவகப்படுத்திக் கொள்ளும் ரகம். அப்படிப்பட்ட என்னை திடீரென்று பல்லக்குத் தூக்கச் சொன்னவுடன் ஓர் இன்ப அதிர்ச்சி! அது மட்டுமல்ல... அது ஒரு மலைக்கோவில். ஸ்வாமியைக் கீழேயிருந்து மேலே உலா வரச் செய்து, பின் திரும்பவும் கீழே கொண்டு வர வேண்டும். அப்படி மேலே ஏறுகையில் ஸ்வாமியின் திருமேனி தவறிக் கீழே விழாமலிருப்பதற்காக அந்தப் பெரியவர் என்னை நோக்கி, "ஸ்வாமியை ஒரு கையால அணைச்சுப் பிடிச்சுக்கங்க" என்றார்.

பல்லக்கினை மட்டுமல்லாது ஸ்வாமியையும் தொட்டுத் தூக்கும் பேறு எதிர்பாராது கிடைத்ததை எண்ணி உடம்பெல்லாம் ஒரு சிலிர்ப்பு! மகிழ்ச்சியுடன் அவர் சொன்னபடியே இடது தோளில் பல்லக்கைச் சுமந்து கொண்டு, வலது கையால் உற்சவ மூர்த்தியின் பாதத்தினை இறுகப் பற்றிக் கொண்டேன். அவ்வளவுதான்! பிடித்துக் கொண்ட அந்த தெய்வீக க்ஷணத்தில் நான் என்னை மறந்தேன்! அந்த க்ஷணத்தில் மனதுள் நான் அடைந்த அந்த திவ்ய தரிசனத்தை, அந்த ஆனந்தப் பரவசத்தை சத்தியமாக என்னால் எழுத்தில் வெளிக் கொணர முடியவில்லை!

அதுவரை நான் முற்றிலும் அறியாத ஒரு ஆன்மீகக் கடலில் மூழ்கித் திளைத்த அந்த அரை மணி நேரம், என்னைப் பொறுத்தவரை வாழ்க்கையில் மறக்க முடியாத ஒரு சுகானுபவம்!

– எஸ். ராஜேஷ்,
புதுதில்லி – 67.



● வீ. முத்தையா, திருநெல்வேலி. ☐

*? சமூக விரோதிகளை பேட்டி கண்டு அவர்களைப் பிரபலப்படுத்துவது ஆரோக்கியமான விஷயமா?*

! சட்டம், ஒழுங்கை நிலை நாட்ட வேண்டிய அதிகாரிகளும் அமைச்சர்களுமே சமூக விரோதிகளாகச் செயல்படும்போது, தொழில் ரீதியான சமூக விரோதிகள் அந்தப் போலிகளைவிட உயர்ந்தவர்களாகத் தெரிவது ஆச்சர்யமில்லை.

● எம். பாக்கியமுத்து, திருச்சி - 20.

*? 'மாநிலக் கட்சிகளை ஊக்குவிக்கக் கூடாது' என்று நந்தியாலில், பிரசாரத்தினிடையே சொல்லியிருக்கிறாரே பிரதமர்... இப்படி லஜ்ஜையில்லாமல் எவ்வாறு பேச முடிகிறது...?*

! இரட்டை நாக்கு இருப்பதால்தான்! சேலத்தில் 'ஜெ'யுடன் ஒரே மேடையில் பேசும்போது நந்தியாலில் பேசியதையா நினைத்துக் கொண்டிருந்தார்!

● என். பாலகிருஷ்ணன், வளவனூர்.

*? 'உயிர் இருக்கும்வரை முதல்வருக்கு துரோகம் செய்ய மாட்டேன்' என்று சொல்லும் வீரமணியின் நன்றியுணர்வு பாராட்டத் தக்கதுதானே...?*

! ஆமாம்... ஆண்டுச் சந்தாவுக்கும் ஆயுள் சந்தாவுக்கும் இடையேயுள்ள வித்தியாசத்தை உணர்த்தும் பேச்சு... நிச்சயம் பாராட்டத் தக்கதுதான்!

● எச். எஸ். மணி, திருச்சி - 5.

*? 'தமிழ்நாட்டில் காங்கிரஸ் தலைவர்கள் கடந்த முப்பது ஆண்டுகளாக உட்கட்சிப் பூசல்களில் ஈடுபட்டதோடு சரி... வேறு என்ன செய்திருக்கிறார்கள்!" என்று பிரதமர் ஆனந்த விகடனுக்கு அளித்த பேட்டியில் பேசியுள்ளாரே?*

! 'டெல்லியில் மட்டும் என்ன வாழ்ந்தது?' என்று திருப்பிக் கேட்டிருக்க வேண்டாமோ! உட்கட்சி ஜனநாயகம் தழைக்காத கட்சியில் உட்கட்சிப் பூசல்கள்தான் தழைக்கும்.

● பொன். குமார், சேலம் - 6.

*? தேர்தல் பிரசாரத்தில் அமைச்சர் இந்திர குமாரி கண்ணீர் விட்டு அழுதாராமே?*

! 'இறந்தபின் என்னை நாட்றாம்பள்ளியிலேயே அடக்கம் செய்யுங்கள்' என்று 'டயலாக்' வேறு பேசியுள்ளார். மக்களை அழ வைத்த கொடுங்கோலர்கள் அழும் காலம் இந்தத் தேர்தல் சீசன்!

● ஜி. அர்ஜுனன், திருப்பூர்.

*? ராஜ் டீ.வியில் டி.ஆர். ரொம்ப அலட்டிக் கொள்கிறாரே?*

! அவர் இயல்பே அதுதான்! நல்ல தமாஷ்!

● ஆர். இருதயராஜ், கும்பகோணம்.

*? 'நிலையான ஆட்சி, நிலையான ஆட்சி'ன்னு ராகம் பாடும் பல்லவிக்கு என்ன அர்த்தம்?*

! கணிசமான மெஜாரிட்டி கொடுத்தீங்கன்னா, எம்.பிக்களை விலைக்கு வாங்க மேலும் ஊழல் பண்ண நேராதுன்னு அர்த்தம்!

● கலை அரசு, கோவை.

*? வேட்பாளர் அதிமுகம் என்கிற பெயரில் ஜெ இரண்டொரு நிமிடம் பேச, வேட்பாளரோ கூப்பிய கரங்களுடன் வாய் திறக்காமல் மேடையில் நிற்கிறார். இத்தகையவர்கள் சட்டசபைக்குப் போய் என்னத்தைப் பேசப் போகிறார்கள்?*

! சட்டசபைக்குப் போக இருப்பவர்களுக்குத் தானே அந்தக் கவலை!

● க.கு.வே. சித்திரவேலு, கருப்பம்புலம்.

*? பிரபலமானவர்களின் இல்லற*

'கண்ணகி போல் நீதி கேட்கிறேன்' என்கிறாரே ஜெ...?



• பாணி மாறியது!



• அழும் காலம்!

வாழ்வு அப்படியொன்றும் சொல்லிக் கொள்கிற மாதிரி இல்லாமல் போவதேன்...? (உதாரணம் சார்ல்ஸ்-டயானா; மண்டேலா-வின்னி...)

! ஏன் நெகடிவ் வாழ்க்கைகளையே பார்க்கிறீர்கள்...? பாஸிடிவ் எடுத்துக்காட்டாக விளங்குவோரும் இருக்கிறார்கள்... காந்தி-கஸ்தூர்பா; நேரு-கமலா; விண்ட்ஸர் கோமகன் தம்பதி என்று பலரைச் சுட்டிக் காட்டலாம்.

● **வி. சத்தியப்ரியன், சென்னை - 15.**

? 'நடக்கிற தர்மயுத்தத்தில் வோட்டுப் போடும் மக்கள் கருணாநிதியை ஆட்சிக்கு வர விடலாமா...?' என்றும் 'கண்ணகி போல் நீதி கேட்கிறேன்...?' என்றும் ஜெயலலிதா பிரசாரம் செய்து வருகிறாரே?

! பாரதக் கதையையே மாற்றி எழுதும் அவரை வியாசர் மன்னிப்பாராக...! கண்ணகி வேறு, கண்ணகி வேஷம் போடுகிறவர்கள் வேறு என்பது பெரும்பான்மை மக்களுக்கு நன்றாகவே தெரியும்.



• காப்பாற்றிக்...



• ....கொடுத்தார்கள்!

● **டி.ஆர். பாலசந்தர், திருநெல்வேலி - 6.**

? சமீபத்தில் படித்த தேர்தல் ஜோக்...?

! படித்த ஜோக் அல்ல... நடந்த ஜோக்! பிரசாரக் கூட்டத்தில் மக்களை நோக்கி வரிசையாகக் கேள்விகள் கேட்டு வந்த ஜெ. 'இப்படிப்பட்ட கருணாநிதிக்கா உங்கள் வோட்டு...?' என்று கேட்க, அவர்கள் குழம்பிப் போய் 'ஆமாம்! ஆமாம்!' என்று பதில் சொல்ல, 'ஜெ' தமது பிரசார பாணியையே மாற்றிக் கொள்ளும்படி ஆகியிருக்கிறது!

● **எஸ்.எஸ். வள்ளுவன், வேம்பார்.**

? டெண்டுல்கர் சிறப்பாக விளையாடினால் அன்று இந்தியா தோல்வியைச் சந்திக்கும் என்று என் நண்பன் கூறுவது உண்மையா?

! நண்பருடைய நம்பிக்கை பொய்யாகி விட்டதே! சச்சினும் சித்துவும் ஆளுக்கொரு சதம் போட, கடைசி சில பந்துகளில் அஜாருதீன் வானத்தை விலை பேசியதுபோல் ஆட, இந்தியா ஒரு மகத்தான வெற்றி பெற்று, பந்தயத் தில் தொடர்ந்து ஆடும் வாய்ப்பைத் தக்கவைத்துக் கொண்டதே!



• ஆயுள் சந்தா!

● **கனகவல்லி, சென்னை - 42.**

? பச்சையப்பன் கல்லூரி முதல்வர் தாக்கப்பட்டது பற்றி...?

! யார், எதற்காகச் செய்தார்களோ...? செய்த காரியம் அருவருப்பானது; அநாகரிகமானது; மன்னிக்க முடியாத குற்றம். தேர்தல் பரபரப்பில் போலீஸ் இது பற்றிக் கவலைப்படவே காணோமே!

● **எம். சந்திரசேகர், மேட்டு மகாதானபுரம்.**

? சிங்கர் கோப்பையை பாகிஸ்தான் கைப்பற்றியதுபோல் ஷார்ஜா கோப்பையை இந்தியா கைப்பற்றுமா?

! சந்தேகம்தான்! தென் ஆப்பிரிக்கா வென்றால் தகுதியான அணிக்கு கோப்பை போய்ச் சேர்ந்த திருப்தி கிடைக்கும். குறிப்பாக, அவர்களுடைய ஓப்பனிங் பாட்ஸ்மென் நிதானமாக, அலட்டிக் கொள்ளாமல் ஆடி, 'பாட்டிங்' கலையின் பல்வேறு நுணுக்கங்களை வெளிப்படுத்தி அசத்துகிறார்களே...!



• இரட்டை நாக்கு!



• நல்ல தமாஷ்!

● **பூமகன், திருமயம்.**

? 'தமிழக வாக்காளர்களுக்குப் புரியாமலா போகும்?' என்று கேட்கும் நீர், சர்க்காரியா கமிஷனால் 'ஊழல் தாத்தா' என்று அடையாளம் காட்டப்பட்டவருக்கு ஆதரவு தருகிறீரே? அதன் மர்மம் என்ன...?

! அன்றைய கருணாநிதி ஆட்சியை கல்கி கடுமையாக விமர்சிக்கத் தவறவில்லை. ஆனால் இன்றையச் சூழ்நிலையில் அதை விட பல்லாயிரம் மடங்கு மோசமான ஜெ ஆட்சியை விரட்டுவதே வாக்காளர்களின் முதல் கடமை என்பதை எடுத்துக்காட்டுகிறது கல்கி. குற்றம் புரிந்தால் மக்களால் தண்டிக்கப்படுவோம் என்று மு.க. உணர்ந்ததுபோல் 'ஜெ'யும் உணர வேண்டுமல்லவா...?

□ ரூ. 25 பரிசு பெறுபவர்:
வீ. முத்தையா,
35, பாரதியார் தெரு,
திருநெல்வேலி டவுன் – 627 006.




''கூட்டணி வச்சுக்கிட்ட எல்லா தலைவர்களும் அம்மாவோட ஹெலிகாப்டர்ல போகணுமுன்னு ஆசைப்பட்டாங்களாம்...''

• • • • •



''இடைவிடாம தேர்தல் பிரசாரம் பண்ணினதிலே தலைவருக்குக் கொஞ்சம் தடுமாறிடுச்சு...''

''எப்படிச் சொல்றே?''

''ஒர் இடத்திலே பேசும்போது 'ஊழல் செய்த எங்களுக்கே உங்கள் வோட்டு'ன்னு உளறிட்டார்.''

- தஞ்சாவூர் ராஜபாரதி

# திருநாவுக்கர

சுமார் ஏழாண்டு காலம் ஜெயலலிதாவைக் கடுமையாகச் சாடிவிட்டு இப்போது அம்மாவின் வேட்பாளராக அறந்தாங்கியில் நிற்பதுதான் திருநாவுக்கரசுக்கு ஏற்பட்ட சோதனை! இத்தொகுதியில் கடந்த ஐந்து முறைகளும் வெற்றிவாகை சூடியிருந்தாலும் இந்த ஆறாவது முறை அவரது கட்சி மாற்றம் ஒரு பெரிய பாதிப்பை ஏற்படுத்தும் என்றே பலரும் கருதுகிறார்கள்.

ஆனாலும் திருநாவுக்கரசோ, ''அதெல்லாம் ஒன்றும் பிரச்னையில்லை. இரட்டை இலை எம்.ஜி.ஆரின் சின்னம். தவிர, தனிப்பட்ட முறையில் தொகுதியில் எல்லோரையும் எனக்குத் தெரியும். இல்லையென்றால் சென்ற தேர்தலில் ராஜீவ் கொலை செய்யப்பட்டதால் ஏற்பட்ட அனுதாப அலையையும் மீறி, நான் சுயேச்சையாக வெற்றிபெற்றிருக்க முடியுமா?'' என்று கேட்கிறார்.

என்றாலும் திருநாவுக்கரசு பிரசாரம் செய்யும்போது, பல சோதனைகளைச் சந்திக்க வேண்டியிருக்கிறதாம். வல்லவாரி என்ற ஊரில் பெண்கள் சிலர் அவரிடம், 'சென்ற முறை உங்களுக்கு வோட்டுப் போட்டோம். இந்த முறை உதயசூரியனுக்குத்தான்!' என்ற போது 'ஏன்?' என்று கேட்டாராம் திருநாவுக்கரசு. 'நீங்க மட்டும் கட்சியை மாத்திக்கலாம்...

• ஜனார்த்தனம்



• சண்முகம்



நாங்க சின்னத்தை மாத்திப் போடக் கூடாதா?' என்று முகத்தில் அடித்த மாதிரி கேட்டார்களாம் அந்தப் பெண்கள்.

தவிர, இவரைப் போல் கட்சி மாறாமல் இருக்கும் எம்.ஜி.ஆர். அண்ணா தி.மு.க. தொண்டர்கள் கேட்கும் கரடுமுரடான கேள்விகளுக்கும் திருநாவுக்கரசு பதில் சொல்ல



வேண்டியிருக்கிறதாம். ஓர் இடத்தில் பொறுமையிழந்து தொண்டர் ஒருவரை அடிக்கப் போய் விட்டாராம் தி. அரசு.

"தி.மு.க. காரங்க செய்யற விஷமப் பிரசாரம் இது. அறந்தாங்கியைப் பொறுத்தமட்டில் எந்த இயக்கமாக இருந்தாலும், அண்ணன்தான் அந்த இயக்கம். அதில் எங்களுக்குக் குழப்பமே கிடையாது!" என்று சொன்னார் தி.அரசுவின் அணுக்கத் தொண்டர் ஒருவர்.

திருநாவுக்கரசுவை எதிர்த்து நிற்கும் தி.மு.க. வேட்பாளர் சண்முகம் தேர்தலில் நிற்பது இதுதான் முதல் முறை. ஜெ. எதிர்ப்பு அலை, ரஜினி ரசிகர்களின் அயராத ஒத்துழைப்பு ஆகியவை வெற்றிபெற வைத்து விடும் என்று தீவிரமாக நம்புகிறார்கள் தி.மு.க. தொண்டர்கள்.

மூன்றாவது போட்டியாளராக ம.தி.மு.க. சார்பில் போட்டியிடும் ஏ.பி.ஆர். ஜனார்த்தனம், "நான் அரை நிக்கர் போட்டுக் கொண்டு அறந்தாங்கித் தெருக்களில் சுற்றியவன். அதனால் வெற்றியும் எனக்குத்தான்!" என்கிறார்.

நகர்மன்றத் தலைவராகவும், நகர கூட்டுறவு வங்கித் தலைவராகவும் இருந்ததால் இவரும் மக்களுக்குத் தெரிந்த முகம். "இங்கே தி.மு.க.வே கிடையாது. உண்மையான போட்டி எங்களுக்கும் திருநாவுக்கரசுவுக்கும்தான்!" என்கிறார்கள் ம.தி.மு.க.வினர்.

யார் சொல்வது உண்மையோ தெரியவில்லை. இருப்பினும் இந்த முறை திருநாவுக்கரசுவை அறந்தாங்கி மக்கள் தேர்ந்தெடுத்தால் அரசியல்வாதிகளுக்கென்று எந்தவிதமான கொள்கைகளும் தேவையில்லை; அரசியல் ஒழுக்கமும் தேவையில்லை என்பது நிரூபணமாகிவிடும்!

— ஆர்.எஸ்.


• திருநாவுக்கரசு

"நீங்க கட்சியை மாத்தலாம்; நாங்க சின்னத்தை மாத்தக்கூடாதா?"

# மழலை

விளக்கையும் உரசியாயிற்று. அலாவுதீன் வர வேண்டியதுதான் பாக்கி. ஆனால் அலாவுதீன் வருவதற்குள் கருப்ஸின் மாமா வந்து அவனை அழைத்துச் சென்றுவிட்டார். கதை அரைகுறையாய் நின்றுவிட்டது குறித்து கருப்ஸிற்கு வருத்தம் இருந்தாலும், புது இடம் அவனது வருத்தத்தைச் சற்று நேரத்தில் மாற்றிவிட்டது. எத்தனை பெரிய ஊர். எத்தனை பஸ்கள், கார்கள், மனிதர்கள்... இந்தக் கடையில் சேவு, லட்டு, மிக்சர், அல்வா, பூந்தி வகையறாக்கள்... அதைத் தொட்டு டீக்கடை. வடை, பஜ்ஜி, முறுக்கு... ஆகா, இது அல்லவா ஊர்!

"வயசென்ன?" என்றார் முதலாளி. அடேயப்பா, எவ்வளவு பெரிய மோதிரம்! கருப்ஸ் அதிசயித்தான். தீப்பெட்டி மாதிரி மோதிரம்.

"பத்து வயசு மொதலாளி..."

"பெயரென்ன...?" என்றார் முதலாளி.

"கருப்பசாமிங்க. டேய், சொல்லேன்டா..."

"கருப்ஸ்..."

"நிறைய பேர் நிக்காணுக. இவனும் நின்னுட்டுப் போகட்டும்..."

நியமன உத்தரவைப் பெற்றுத் தந்துவிட்டு மாமா, "மொதலாளி சொல்றபடி நட..." என்று விடை பெற்றுக் கொண்டார். தனியாய் விடப்பட்ட கருப்ஸ் சில தினங்கள் கசப்பை உணர்ந்தாலும், போகப்போக புது வாழ்வின் அனுபவங்களைத் தன்னுள் தினித்துக் கொள்ளத் துவங்கினான்.

முதலாளியின் கடைகள் பிரதான சாலையில் இருந்தன. ஒரு டீக்கடை, ஒரு லாலா மிட்டாய்க் கடை. டீக்கடையில் வேலை என்று சொல்லித்தான் கருப்ஸைக் கூட்டி வந்திருந்தார்கள். டீக்கடையில் இவன் என்ன வேலை செய்வான் என்றது அம்மா ஆச்சரியமுடன். கருப்ஸ் வேறு ஒரு வேலையும் செய்ய வேண்டாம். டீ மாஸ்டர் போட்டுத் தரும் டீக்களை வாடிக்கையாளர்களிடம் சேர்த்தால் போதுமானது என்கிற பதில் வந்தது. கருப்ஸ் மானசீகமாய் தயாராகி வந்ததும் இதை எதிர்பார்த்துத்தான். ஆனால், வந்த சில தினங்களில் தன்னைத் தன் முதலாளி ஒரு பல்துறை வல்லுனராக்க முடிவு செய்துள்ளதை கருப்ஸ் உணர்ந்து கொண்டான்.

வந்த மறுநாள் கருப்ஸ் டீக்கடையின் உள்ளே படுத்திருந்தான். முதலாளியின் குரல் அவன் காதையும், கால்கள் உடலையும் தாக்கின. பொழுது புலர்ந்து விட்டது அவனுக்குப் புரிந்து போனது. ஒருவேளை தான் புதுசு என்பதால் தான் இதுபோல் மிதிகள் வழங்கப்பட்டதோ என்கிற சந்தேகம் எழுந்தது. இவனுக்கு முன்னால் கிடந்த பல்துறை வல்லுனர்களுக்கும் மிதிகள் தாராளமாய் வழங்கப்பட்டதைப் பார்த்தவுடன் எதுவும் நம் கையில் இல்லை; எந்த நொடியிலும் எதுவும் நடக்கலாம் என்கிற மனநிலையை கருப்ஸ் அடைந்தான்.

"பாத்திரத்தக் கழுவுல..."

கருப்ஸ் பாத்திரங்களை தயக்கமுடன் பார்த்தான். பெரிய, பெரிய பாத்திரங்கள். இதற்கு முன்னால் அவன் இவற்றைப் பார்த்தது கூடக் கிடையாது. தயக்கமுடன் அவன் முதலாளியிடம் "கழுவத் தெரியாது முதலாளி"- என்று சொல்லிப் பார்த்தபோது அவனுக்கு யாரும் எதையும் தெரிந்து கொண்டு பிறப்பதில்லை என்ற ஞானமும், தலையில் இரண்டு தட்டல்களும் கிடைத்தன.

பாத்திரங்கள், தம்ளர்கள், தண்ணீர், கருப்ஸ்.

சூரியன் மெல்லக் கண் திறந்து கொண்டிருந்தான். டீக் கடையில் பேப்பர் படித்தவாறு சிலர் டீயை உறிஞ்சிக் கொண்டிருந்தார்கள். முதலாளி லாலாக் கடையில் பக்தியை கடவுள் படங்களின் முன்பு காட்டிக் கொண்டிருந்தார். பன்னிரண்டு விழிகளில் பரிவுடன் ஒரு விழியால் என்னை நீ பார்த்தாலும் போதும் என்றது டேப்.

"கருப்ஸ், பல சரக்குக் கடைல போய் சீனியும், டீத்தூளும் வாங்கீட்டு வால..." என்றார் டீ மாஸ்டர்.

கருப்ஸ் சில்லறையை வாங்கிக் கொண்டு ஓடினான். திரும்பி வரும்போது முதலாளியை எதிர்கொள்ள வேண்டியதாகி விட்டது. "எங்கல போன? பாத்திரத்த எவன் கழுவுவான்?"

"சீனி வாங்கப் போனேன்."

"அதுக்கு எதுக்குல இவ்வளவு நேரம்?"

லேசான வன்முறை.

கருப்ஸ் லாலா மிட்டாய்க் கடையில் உட்கார வைக்கப்

**சிறுகதை**

செ. சங்கர்பாபு

பட்டிருந்தான். அங்கே இவனது வேலை ரோட்டில் போகிற ஆட்களைப் பார்த்துக் கூவுவது.

"யக்கோவ், சேவு வாங்குங்க."

"யக்கோவ், ஜிலேபி இப்பதான் போட்டது."

"ஸார், மிக்சர் சூடா இருக்கு. வீட்டுக்கு வாங்கிட்டுப் போங்க ஸார்."

"அண்ணே.... லட்டு அண்ணே..."

"மிக்சர், மிக்சர், மிக்சர்..."

கருப்ஸின் பால்மணம் மாறாக்குரல் காற்றில் கலந்து வாடிக்கையாளர்களை அழைக்கது. கத்திக் கத்தித் தொண்டை



சற்று வலித்த போதும், இந்த வேலை அவனுக்குப் பிடித்திருந்தது. ஆனால் முதலாளி இதைத் தொடர்ந்து செய்ய விட்டால் தானே. இங்கிருந்தால் டீக் கடைக்குக் கூப்பிடுவார். டீக் கடையில் இருந்தால் இங்கே கூப்பிடுவார். டீக்கடையிலிருந்து கொஞ்ச நேரம் தள்ளி இந்த லாலாக்கடை இருந்தால் எப்படி இருக்கும் என்று கருப்ஸ் நினைத்துக் கொண்டான்.

"ஒவ்வொரு கடையாய் போயி, டீ காபி வேணுமான்னு கேளு. எச்சில் கிளாசு இருந்தாலும் எடுத்துட்டு வா. மறக்காம சில்லறை வாங்கிட்டு வா..."

மெடிக்கல்.

"மாமா, டீ வேணுமா மாமா?" என்றான் கருப்ஸ் கெஞ்சலுடன்.

"வேண்டாம் போடா..."

"ரெண்டு டீ கொண்டு வரட்டுமா?"

"கொண்டு வா. ஆனா துட்டு தர மாட்டேன்."

"டீ வாங்குங்க மாமா" என்றான் கருப்ஸ்.

அடுத்து பலசரக்குக்கடை, துணிக்கடை, ஷாப், பழக் கடை... டீ வேணுமா, காபி வேணுமா... அப்ப வாங்கின

டீக்கு சில்லறை கொடுத்தீங்களா, எச்சில் கிளாஸ் ஏதாவது கிடக்கா..."

"டேய், அஞ்சு காபி, ஒரு பால் கொண்டு வாடா...."

இப்போது கருப்ஸ் அந்தப் பகுதியில் நன்கு பழகி விட்டான். எந்தக் கடையில் வேண்டுமானாலும் நுழைந்து விடுவான். உரிமையாய் பேசுவான்; அதிகாரம் செய்வான்; கொஞ்சுவான்.

"இந்தாடா, அம்பது ரூபாய்க்கு சில்லறை வாங்கிட்டு வா... சீக்கிரம் வா..." என்றார் முதலாளி.

கருப்ஸ் ஓடினான். மூச்சிரைக்க பல சரக்குக் கடையில் நின்றான். இந்த முதலாளி நல்லவர். சில்லறை இருந்தால் கொடுத்து விடுவார். இவனிடம் அன்பாய் இருப்பார். சட்டையற்ற அவனது தேகத்தைப் பார்த்து, பரிதாபப்பட்டு சோப்பு கம்பெனிக்காரன் கொடுத்த குயில் மார்க் சோப் படம் போட்ட பனியனைக் கூடக் கொடுத்திருக்கிறார். அந்தப் பனியனுள் கருப்ஸ் பிரவேசித்த போது அவனை எங்கே என்று தேட வேண்டியதாகி விட்டாலும், ஆனை முக்கும் அந்தப் பனியனைவிட கருப்ஸிற்கு மனசில்லை. முழங்காலைத் தாண்டி நீளும் அந்தப் பனியனோடு தான் அங்குமிங்கும் அலைந்தான்.

"மொதலாளி, சில்ற கொடுங்க மொதலாளி."

"இல்ல போடா..."

"சில்ற கொடுங்க மொதலாளி."

"போடான்னா..."

"கொடுங்க மொதலாளி..."

"இல்லடா..."

"உள்ள பாருங்க, இருக்கும்."

"இவன் ஒருத்தன். இந்தா..."

"மொதலாளி, போன்ல பேசலாமா?"

"நீ யார்கிட்டப் பேசப் போற!"

"திருப்பதில என் தம்பி வேல பாக்காம்லா, ஒரு வீட்ல. அவன்கிட்ட தான்...."

"ஓ. உன் தம்பியும் வேல பாக்கானா... சரி, பத்து வயசுப் பையங்க போன் பண்ணக் கூடாது. தெரியுமில்ல?... உனக்கு இன்னும் கொஞ்சம் வயசாகட்டும்..."

கருப்ஸ் பொய் என்று வாதாடிப் பார்த்தான். பலனில்லை. ஏமாற்றமுடன் திரும்பினான். முதலாளி "சில்லறை வாங்கிட்டு வர இவ்வளவு நேரமா?" என்று ஆத்திரமுடன் கேட்டு காதுக்கும், அவன் உடலுக்கும் உள்ள உறவைப் பிரிக்க சற்று முயன்றார்.

"இந்தச் சின்னப் பையன்கிட்ட எனக்குப் பிடிச்சதே இந்தப் புன்னகைதான்..." என்றார் மிக்சர் வாங்க வந்த ஒருவர். கருப்ஸிற்குப் பெருமையாக இருந்தது. மிகுந்த உற்சாகமுடன் "ஸார், லட்டு வேணுமா?" என்றான். "ஜிலேபி வேண்டாம். அது போட்டு ரொம்ப நாளாச்சு..." என்றான் மெதுவாய்.

இதுமாதிரி யாராவது சொன்னால் எத்தனை சந்தோஷமாய் இருக்கிறது. நேற்று கூட அப்படியொரு சந்தோஷ சந்தர்ப்பம் ஏற்பட்டது.

அப்போது கருப்ஸ் தொட்டியை சுத்தம் செய்து கொண்டிருந்தான். கடையிலிருந்து வெளியேறும் கழிவுநீர் ஒரு தொட்டியில் சேகரமாகும். கருப்ஸின் பணி அந்தத் தொட்டியிலுள்ள கழிவுநீரை ஒரு டப்பாவில் முகர்ந்து சாலையில் கொட்டி தொட்டியைச் சுத்தம் செய்ய வேண்டும்.

கருப்ஸ் நடுரோட்டிற்கும், தொட்டிக்கும் இடையே பறந்து கொண்டிருந்தான். கழிவுநீர் வாடை அவனது உடலிலும் அடித்தது. வியர்வைச் சிறையுள் இருந்த கருப்ஸின் காதுகளில் "லே, இங்கயா இருக்க நீ?" என்கிற வார்த்தைகள் விழுந்தன. கழிவுநீரை சாலையில் கொட்டி விட்டுத் திரும்பினால் வாத்தியார். "அதான பாத்தேன்! என்னடா ஸ்கூலுக்கு வரலியேன்னு– இப்ப இந்த வேலை நடக்குதாக்கும்!"

"மாமா சேத்து வுட்டாரு ஸார்...." என்றான் கருப்ஸ் கூச்சமுடன். "டீ சாப்பிடுங்க ஸார்..."

"வேணாம்பா..."

"இப்ப யாரு ஸார் ஃபஸ்ட் வர்றாங்க?"

"உனக்குப் பின்னால இருந்த முத்துதான்... இவன் கருப்பசாமி. நம்ம பையன்தான்..." என்றார் வாத்தியார் தன் சிநேகிதரிடம். கருப்ஸிற்குப் பெருமையாக இருந்தது.

"என்னலே, கனவு கண்டுகிட்டு இருக்க?..." என்றார் முதலாளி.

"ஒண்ணுமில்ல மொதலாளி..."

"வீட்ல கொண்டு போய் கொடுத்துட்டு வா..." என்றவாறு பையை நீட்டினார் முதலாளி. காய்கறிகள்.

வீடு சற்றுத் தொலைவில் இருந்தது. முதலாளி அம்மா நல்ல டைப்தான். அன்பாய் ஒரு பழைய சட்டைகூட கொடுத்தது. என்ன ஒரு கெட்ட பழக்கம் என்றால், அடிபைப்பில் தண்ணீர் அடிக்கச் சொல்லும். சனியன், பைப்பா அது! எவ்வளவுதான் எம்பி எம்பிக் குதித்தாலும் தண்ணீர் வராது. முதலாளி அம்மாவும் விடாது. ஒரு குடம் தாம்பா, ரெண்டு குடம்தாம்பா என்று சொல்லி அடிக்க வைத்து விடும். அடித்து முடித்தால் தலை சுற்றும். மயக்கம் வருகிற மாதிரி இருக்கும். ஆனால் முதலாளி அம்மா பழையசோறு இருந்தால் போட்டு விடும். ஒளியும், ஒலியும் பாத்துட்டுப் போ என்று சொல்லும்.

திரும்பி வரும்போது கருப்ஸ் வேன் டிரைவர் ஜோசப்பைப் பார்த்து விட்டான். நல்ல

• பொறுப்புகள் தம்மைத் தாங்கக் கூடியவனையே தேடிச் செல்கின்றன. • இ. ஹப்பார்டு; தகவல்: எஸ். விஜயா சீனிவாசன்

**ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்பது அன்று !**
**ஏழையின் இறப்பில் பலகோடி கண்டது இன்று !**



# சுடுகாட்டுக் கொட்டகையிலும் சுரண்டும் பேய்களை விடமாட்டோம்; விரட்டியடிப்போம் !

**ஆதரிப்பீர்**



**உதயசூரியன்**




தி.மு.க. முற்போக்குக் கூட்டணியின் சின்னங்கள்







வாக்களிப்பது உங்கள் உரிமை. அந்த ஜனநாயகக் கடமையை நிறைவேற்றத் தவறாதீர்.

வெளியீடு : தி.மு.க. தலைமை நிலையம், அண்ணா அறிவாலயம், சென்னை 600018.

**நாட்டைக் காப்போம் ! நல்லாட்சி காண்போம் ! !**

உறுதியான சேமிப்பு! உங்கள் பாதுகாப்பு!

உடனடி நகைக்கடன் ரூ. 20,000/- வரை,
24 மணி நேரத்திற்குள்ளாக மாநகர எல்லைக்குட்பட்ட
வில்லங்கமில்லாத சொத்துக்களின் பேரில்
ரூபாய் 1 லட்சம் வரை கடன் வசதி.

பிக்செட் டெபாசிட், ரெக்கரிங் டெபாசிட்
மற்றும் சேமிப்பு கணக்குகளுக்கு
வியப்பூட்டும் விகிதத்தில் வட்டி அளிக்கிறது.

# MBF

## மந்தவெளி பெனிபிட் பண்ட் லிமிடெட்

**Main Branch** : 'P.A. Building' 42, Venkatakrishna Road,
R.A. Puram, Madras - 600 028.
☏ 493 8314 / 493 8315 / 493 8316

**Egmore Branch** : 'P.A. House' 32A, Halls Road, Egmore,
Madras - 600 008. ☏ 826 4422 / 826 4433




## P.A. CONSTRUCTION GROUP

* Transactions with members only.

EC/MBF/3/96

அண்ணன். "அண்ணே, எனக்கு எப்போ வேன் ஓட்டச் சொல்லித் தருவீங்க?" என்றான் கருப்ஸ் ஆர்வமுடன்.

"உனக்கு படுக்கக் கொஞ்சம் எடம் கொடுத்தா வேனையே கேப்ப போலிருக்கே..." என்றார் அண்ணன்.

"ஆமா..." என்று கருப்ஸ் புன்னகைத்தான். "இன்னிக்கும் வருவேன்..." என்றவாறு ஓடினான்.

தனது பணியில் எந்தத் துன்பத்தையும் பொறுத்துக் கொள்ள கருப்ஸ் சித்தமாயிருந்தான். ஆனால், தூங்க நல்ல இடம் அமையாததை மட்டும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. டீக்கடையில் படுத்தால் தூங்கவே முடியவில்லை. முதலாளி சீக்கிரம் எழுப்பி விட்டு விடுகிறார். இல்லை, தண்ணீர் அடித்து விட்டு ஆம்லேட் வாங்கிட்டு வா, ஆப்பாயில் வாங்கிட்டு வா என்று கத்துவார். வெங்காயத் தோல்கள், காலி சிகரெட் உறைகள், டீ, காபி பாக்கெட்டுகள், கரித்துண்டுகள்... இவைகளுக்கு மத்தியில் தூங்கவே முடியவில்லை.

லாலா மிட்டாய்க் கடையில் தூங்கலாம் என்றால் கொசுக்கடி. மைதா மாவு, கடலை மாவு, பலகாரங்கள் சிந்திச் சிந்தி தரை எப்போதும் பிசுபிசுப்பாக இருக்கின்றது. பெருச்சாளிகள், எலிகள் வேறு அலைகின்றன. கரப்பான் பூச்சிகளும் அதிகம்.

இந்தத் தருணத்தில்தான் சக தொழிலாளி ரத்னம், கடைக்கு சற்றுத் தள்ளி நிறுத்தப்பட்டிருக்கும் வேன்களில் ஏறிப் படுத்துக் கொள்ளலாம் என்று சொன்னான். வேன் டிரைவர் ஜோசப் அடிக்கடி கடைக்கு காபி சாப்பிட வருகிறவர்தான். அவரும் சம்மதம் சொல்லிவிட்டார்.

இரவானால் கருப்ஸ் கிழிந்த போர்வையுடன் வேனில் ஏறிப்படுத்து விடுவான். இப்போது நன்றாய் உறங்க முடிகிறது. சிட் மெத்தைபோல் இருக்கிறது.

'மக்கள் மனத்தைப் பெரிதும் கவர்ந்துள்ளது பழைய பாடலே! புதிய பாடலே!' டேப்பில் பட்டிமன்றம் உச்ச கட்டத்தில் இருந்தது.

கருப்ஸ் மேஜையின் மேலே அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான். மேஜையின் மேல் இருந்த தட்டு முட்டுச் சாமான்களுக்கு மத்தியில் சாப்பிடுகிற கலை சமீபத்தில்தான் அவனுக்கு கை கூடியிருந்தது. சாப்பாடு முதலாளி வீட்டிலிருந்து வந்திருந்தது.

"சாப்பிடறியா கருப்பசாமி?" என்றார் தாத்தா அன்புடன். அவர் கல்லாவில் உட்கார்ந்து காசு வாங்கிப் போடுபவர். கருப்ஸை அடிக்காத, பெயர் சொல்லிக் கூப்பிடும் ஒரே ஆள் தாத்தாதான். ஓரிரு முறை முதலாளியின் அடிகளிலிருந்தும் காப்பாற்றியிருக்கிறார்.

"ஆமா தாத்தா..."

"..."

"என்ன தாத்தா, பாத்துக்கிட்டே இருக்கிங்க?"

"சின்ன வயசுடா உனக்கு. உங்கிட்ட இதைச் சொல்றதுல என்ன பிரயோஜனம்! உனக்குப் புரியுமோ, என்னவோ...ம்... எந்த நேரத்துல பிறப்பு எடுத்தியோ... கெடந்து சீரழியற..."

தினமும் நடப்பவைகளை தாத்தா சொல்லத் துவங்கினார். கருப்ஸ் புரியாமல் பார்த்தான். "இதுக்குத்தான தாத்தா சம்பளம் கொடுக்காங்க...?" என்றான் குழப்பமுடன்.

"கொடுக்காங்க, பொல்லாத சம்பளம்! இந்த வயசு பள்ளிக்கூடம் போற வயசுடா. நீ நல்ல பையன். படிக்க வேண்டாமா?.... பெரிய ஆளாக வேண்டாமா? இதுல இருந்தாச் சீரழிவ. இந்த நடுத்தெரு வாழ்க்கை வேண்டாம். கெட்டுக் குட்டிச்சுவராப் போயிருவ... இங்க இருந்து போயி உருப்படற வழியப் பாரு. பள்ளிக்கூடம் போற வழியப் பாரு..."

கருப்ஸ் தாத்தாவை வியப்புடன் பார்த்தான். என்ன ஆயிற்று தாத்தாவிற்கு? அலாவுதீன் கதையை முழுசாய் சொல்லி முடித்தவர் இந்த தாத்தாதான். "எல்லாம் சரிதான், நீங்க சொல்றது... ஆனா..." என்று இழுத்தான்.

"இந்த மூணுவேளைச் சாப்பாடு அங்க எவன் போடுதான்?" என்றவாறு கருப்ஸ் தன் கையுள் சிறைப்பட்டிருந்த உணவை சற்று உயர்த்திக் காட்டினான்.

## வென்றது தாவணி!

மார்ச் மாதக் கதைகளில் மிகச் சிறந்ததாக வாசகர்கள் தேர்ந்தெடுத்திருப்பது, நாகை கவின் எழுதிய 'தாவணி' (31.3.96 இதழ்) ஆசிரியருக்குப் பாராட்டுக்களும் ரூ. 500 சிறப்புப் பரிசும்.

"வறுமையில் துளி ஒளி கண்ட ஒரு மூதாட்டி, இரு பெண்களின் மானம் காக்கச் செய்யும் தியாகம் மிகச் சரியாகப் பதிவாகி இருக்கிறபடியால் இது சிறந்த கதை" என்று ரத்தினச் சுருக்கமாகக் காரணம் சொல்லி ரூ. 100 பரிசு பெறும் வாசகர் - விஜயலட்சுமி சூரியநாராயணன், C-14, பகுதி - I, சத்துவாச்சேரி, வேலூர் - 9.

ஜனவரி தொடங்கி இதுவரை முப்பத்தொன்பது சிறுகதைகளில் மூன்றைச் சிறந்தவையெனத் தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள்.

இந்த (ஏப்ரல்) மாதக் கதைகளையும் படித்துத் தேர்வு செய்து சிறந்ததைக் குறிப்பிட்டு அனுப்புங்கள். (கூப்பன் தனியே.)

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி அறிவிக்கப்பட்டுவிட்டதால் இந்த 'மாதாந்திர சிறுகதைத் தேர்வினை' நிறுத்தி வைக்கிறோம். மே மாதத்திலிருந்து கூப்பன் வெளிவராது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

- ஆர்.

# சபாநாயகருக்கே தடை!

சேடப்பட்டி முத்தையா எதிர்க்கட்சிக்காரர்களுக்கு சட்டசபையில் செய்ததை, இப்போது அவரது தொகுதி மக்கள் அவருக்குத் திருப்பிச் செய்வதுபோல் இருக்கிறது நிலைமை! ஆம்; சேடப்பட்டி தொகுதியிலிருக்கும் சுமார் இருபது கிராமங்களில் 'உள்ளே நுழையக் கூடாது!' என்று கடுமையாக எச்சரித்திருக்கிறார்கள் சேடப்பட்டியாரை!

விஷயம் ரொம்ப தூரத்துக்குப் போய் விட்டதை உணர்ந்த சேடப்பட்டியார், இப்போது தமது அணுக்கத் தொண்டர்களையெல்லாம் சம்பந்தப்பட்ட கிராமங்களுக்கு அனுப்பி, மக்களிடம் சமாதானப் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருக்கிறார். "ஒருவழியாகச் சமாதானம் ஏற்பட்ட பிறகுதான் வோட்டுக் கேட்கவே போவார்!" என்கிறார்கள் அவரது அபிமானிகள்.

சேடப்பட்டியாரின் மைனஸ் பாயிண்ட் மக்களின் எதிர்ப்பு மட்டுமல்ல; எதிர்த்துப் போட்டியிடும் ம.தி.மு.க. வேட்பாளர் பொன். முத்துராமலிங்கமும் தி.மு.க. சார்பில் போட்டியிடும் கோ. தளபதியும் கூட அவருக்கு மைனஸ் பாயிண்டுகள்தான்.

பொன். முத்துராமலிங்கம் மதுரைக்காரர் என்பதால் எல்லோருக்கும் தெரிந்த முகம். இளைஞர்கள் மத்தியில் வை.கோ. பற்றியும் ஒருவித நல்ல அபிப்பிராயம் இருப்பதால், சேடப்பட்டி தொகுதியைப் பொறுத்த வரை இப்போது பொன். முத்துராமலிங்கத்துக்கும் கோ. தளபதிக்கும்தான் போட்டி என்றும் சொல்கிறார்கள்.

"சுமார் இருநூற்றைம்பது கிராமங்களைக் கொண்ட சேடப்பட்டி தொகுதி மதுரையை ஒட்டியிருந்தாலும்கூட மிகவும் பின்தங்கிய பகுதிதான். இன்னும் குடிநீர்ப் பிரச்னை கூடத் தீர்த்து வைக்கப்படவில்லை. நான் தேர்ந்தெடுக்கப்பட்டால் குடிநீர்ப் பிரச்னையைத் தீர்த்து வைக்கப் பாடுபடுவதோடு, தொகுதியில் ஒரு தொழிற்பேட்டை அமைக்கவும் பாடுபடுவேன்!" என்று கூறுகிறார் முதன் முதலாகத் தேர்தலில் போட்டியிடும் தளபதி.

ஆயினும் பொன். முத்துராமலிங்கத்தை விட இவரால் அதிக வாக்குகள் பெற முடியுமா? "நிச்சயம் சேடப்பட்டியாரை விட அதிக வாக்குகள் பெறுவார்!" - இது நமது கமெண்ட் அல்ல. தொகுதியில் இருக்கும் அ.தி.மு.க.வினரே அடிக்கும் கமெண்ட்!

• பொன். முத்துராமலிங்கம்

• கோ. தளபதி

• சேடப்பட்டியார்

— கௌசல்யா

# மாதம் ஒரு ரூபாய் சம்பளமாம் !
# நூறு கோடியில் திருமணமாம் ! !



## எங்கிருந்து கிடைத்தது
## இந்தப் பணம் ?
## சிந்திப்பீர் ! செயல்படுவீர் ! !

ஆதரிப்பீர்



உதயசூரியன்




தி.மு.க. முற்போக்குக் கூட்டணியின் சின்னங்கள்







வாக்களிப்பது
உங்கள் உரிமை.
அந்த ஜனநாயகக்
கடமையை
நிறைவேற்றத்
தவறாதீர்.

வெளியீடு : தி.மு.க. தலைமை நிலையம், அண்ணா அறிவாலயம், சென்னை 600018.

**நாட்டைக் காப்போம் ! நல்லாட்சி காண்போம் ! !**

# வட்ட மேஜை

தமிழக வாக்காளர்களுக்குப் புரிந்துவிட்டது!

## ரூ. 20/- பரிசு பெறும் கடிதம்

♦ "ஊழல்களில் மெகா ஊழல்" என்ற தலையங்கம் படித்தேன். ஊழல் ஆட்சிக்கு எதிராகத் தேர்தல் வியூகங்கள் வகுக்கப் பட்டு திட்டமிட்டு பிரசாரம் செய்யப்படு கின்றன. ஆக, எப்படிப் பார்த்தாலும் அ.இ.மு.க. ஆட்சிக்கு மக்கள் ஆதரவு இல்லை என்று தெளிவாகத் தெரிந்து விட் டது. இரட்டை இலை என்ற சின்னத்தின் மீது பேரபிமானம் கொண்டுள்ள வாக் காளர்கள் கூட இப்பொழுது யோசிக்க ஆரம்பித்து விட்டார்கள். ஜெயலலிதா கூட தம்மை நம்பவில்லை; காங்கிரஸை நம்பவில்லை; தொண்டர்களையும் நம்ப வில்லை. முழுக்க முழுக்க இரட்டை இலை சின்னத்தை மட்டும் நம்பிக் களத் தில் இறங்கியுள்ளார் என்பது தெளிவாகத் தெரிகிறது. மற்றபடி காங்கிரஸும் பெய ரளவில்தான் அ.இ.மு.க.வுடன் இணைந் துள்ளது. அதன் உண்மையான தொண் டர்கள் மூப்பனார் பக்கம்தான் இருக்கின் றார்கள். புரிய வேண்டிய விஷயமெல் லாம் தமிழக வாக்காளர்களுக்குப் புரிந்து விட்டது. இது வருகின்ற தேர்தலில் எதி ரொலிக்கும் என்று நம்பலாம்.

திருக்கழி, சுந்தர்-அழகேசன்

♦ தொண்டு கிழங்களுக்கெல்லாம் உண்டு இடம் என்று சொல்லி கே.ஏ.கிருஷ்ண சாமியைப் புறக்கணித்த ஜெயலலிதாவின் செயல், மீனை மிதக்க விட்டு விட்டு, கருவாட்டுக்குக் கனகாபிஷேகம் செய்வது போல இருக்கிறது.

தஞ்சாவூர் - 7, வளர்மதி ஆசைத்தம்பி.

♦ "யார் பிரதமர், யார் முதல்வர்," கல்கி நடத்திய போட்டியில், ஒன்றில் கூட இன்றைய முதல்வர் ஜெயலலிதாவின் பெயர் வராதது பெரிய ஆச்சரியம். என்ன செய்வது, காலத்தின் கட்டாயம் அது!...

மதுரை - 16, ஆர். லட்சுமி.

♦ பல பத்திரிகைகளும் மற்றவர்களும் அடுத்து ஆட்சிக்கு வரப்போகும் கட்சி எது என்பது பற்றி கருத்துக் கணிப்பு, சர்வே என்று குழப்பிக் கொண்டிருக்கும் வேளையில், வாசகர்களிடையே போட்டி வைத்து, மக்கள் மனதைப் படம் பிடித்துக் காட்டிய கல்கி இதழுக்குப் பாராட்டுக்கள்.

ஸ்ரீரங்கம், ரா. கண்ணன்.

♦ 'புரட்சித் தலைவியின் தேர்தல் அறிக்கை' கண்டேன். உண்மையை அப் பட்டமாகப் படம் பிடித்துக் காட்டியிருந் தது அருமை.

தண்டுப்பத்து, வே. மோகனா.

♦ 'இளைஞர் உலகம்'- பகுதியில் பங்கு கொண்டு கருத்துச் சொன்ன சிலரில் 'நான் செல்லாத வோட்டுத் தான் போடுவேன்' என்றும், 'எங்கள் குடும்பம் வோட் டுப் போடப் போவதில்லை' என்றும் சொன்னது, ஒரு புறம் வேதனையாகவும், வேடிக்கையாகவும் இருக் கிறது. படித்தவர்களே இப்படிப் பொறுப்பில்லாமல் பேசலாமா? நமது வாக்குரிமையைச் செலுத்த வேண் டாமா? செல்லாத வோட்டுப் போடுவேன் என்று சொல் வது அசிங்கமில்லையா? கண்டிப்பாக நம் வாக்கைப் பயன்படுத்த வேண்டும்; வோட்டுப் போட வேண்டும்!

செம்பட்டி, வி.எஸ்.இராமு.

♦ "கட்டுப்பாடுகளே சுதந்தரம்" என்ற ஸ்ரீ விஜயேந்திர ஸ்வாமிகள் பேட்டியும் கருணை சொட்டும் அவரது படங்களும் கல்கி சித்திரைச் சிறப்பிதழை அருள் மணக்க வைத்து விட்டன.

கொடுமுடி, ந. சேதுராமன்.

♦ 'பெற்றோர்கள், பிள்ளைகளுக்குப் பள்ளிகளில் அதிகம் சொல்லித் தராத ஆன்மிகத்தை சொல்லித் தர வேண்டும்' என்ற புனிதமிகு மனித தெய்வத்தின் கட்டளையை ஏற்று, தினமும் செயல்படுவேன். இது எனது தமிழ்ப்புத்தாண்டின் ஊக்கமிகு உறுதிமொழி யாகும்.

மதுரை - 16, எல். மீனாட்சி சுந்தரம்.

♦ இரா. முருகனின் 'ஊமியும் உதடுகளும்'- அற்புத மான சிறுகதை. நல்லதொரு டெலிஃபிலிம் தாக்கம். நடை நெடுக கொட்டிக் கிடக்கும் யதார்த்தம். 'பம் பாயை'- புரியாத ஹிந்தியையும், புரிய வைக்கிற ஆற்றல்... எழுதிய கதாசிரியருக்கும்- வெளியிட்ட தங் களுக்கும் மனமார்ந்த பாராட்டுக்களும், நன்றியும்.

தஞ்சாவூர், புத்தகன்.

♦ விருப்பு வெறுப்பற்ற யோக நெருப்பினால்தான் மனிதன் புடம் போட்ட மகானாக முடியும் என்பதை மிகத் தத்ரூபமாக தமது 'குருதட்சணை' குறுநாவலில் படைத்துக் காட்டியுள்ளார் பிரபஞ்சன். அற்புதம்!

பெரம்பலூர், சி. செல்வராஜ்.

♦ 'குருதட்சணை'- பிரபஞ்சன் குறுநாவல் பிரமாதம். 'அன்பை வளர். மனதை அடிக்கடி சுத்தம் செய். மன தின் கடிவாளத்தைக் கையில் வைத்துக் கொள்' என்ற அறிவுரை மிகத் தேவை. இதை வெளியிட்ட உங்களுக் கும் எழுதிய பிரபஞ்சனுக்கும் கடவுள் துணை புரியட் டும்.

சென்னை - 4, கே.ஆர்.கிருஷ்ணமூர்த்தி.

♦ தாரக பதில்கள் பகுதியில் எம்.டி. வாசுதேவன் நாயர் பற்றிய கேள்வியே தவறானதாகும். வாசுதேவன் நாயர் முதல்வரைக் காக்கவைக்கவேயில்லை. ஃபோனில் பேசிக் கொண்டிருந்தவர், முதல்வர் கரம் குலுக்கி அம ரச் செய்துவிட்டு, முக்கிய விருந்தாளி வந்திருப்பதாக ஃபோனில் கூறி வைத்துவிட்டு, கவனத்தை முதல்வர் பக்கம் திருப்பி விட்டார். இதுதான் நடந்தது.

நெய்வேலி, ஆர்.சசிதரன்

# RPS பெனிஃபிட் ஃபண்ட் வழங்கும் தமிழ்ப் புத்தாண்டு பரிசுகள்

உங்களுக்கு மிகவும் பயனுள்ள புதுமையான டெபாசிட் திட்டங்கள்

## RPS சுப நிதி

| டெபாசிட் தொகை * | முதிர்வடைந்தபின் கிடைக்கும் தொகை | |
|---|---|---|
| | 100 மாதங்கள் | 180 மாதங்கள் |
| ரூ. 4,400 | ரூ. 25,000 | ரூ. 1,00,000 |
| ரூ. 6,600 | ரூ. 37,500 | ரூ. 1,50,000 |

* ஊக்கத்தொகை டெபாசிட் தொகையில் 1.5%.

## RPS அக்ஷயா

| உங்கள் முதலீடு | நீங்கள் திரும்பப் பெறுவது |
|---|---|
| 60 மாதங்களுக்கு மாதம் ரூ. 1,000.<br><br>டெபாசிட் தொகை ரூ. 500 மற்றும் அதன் மடங்குகளில் | 60 மாதத்திற்கு பிறகு ரூ. 1,00,000 ரொக்கம் அல்லது உங்கள் ஆயுட்காலம் முழுவதும் மாதம் ரூ. 2,000 பெறலாம். மற்றும் டெபாசிட் செய்த 31வது நாளிலிருந்து ரூ. 1,00,000க்கு விபத்துக் காப்பீடு. |

புதுமையான வழிமுறையில் இப்புத்தாண்டைக் கொண்டாடுங்கள். இன்றே முதலீடு செய்திடுங்கள்.




# RPS BENEFIT FUND LTD

(Declared as "NIDHI" by the Central Government)

தலைமை அலுவலகம் :

16, இராமநாதன் தெரு, தி.நகர், சென்னை - 600 017. போன் : 4341346, 4341554.

கிளைகள்: சென்னை : அடையார், போன் : 4911354; அண்ணாநகர், போன் : 6262517; மந்தைவெளி, போன் : 4936187; நங்கநல்லூர், பெரம்பூர், இராயபுரம், போன் : 5958164; அசோக் நகர் ● பெரிய காஞ்சிபுரம், போன் : 23408 ● கோயம்புத்தூர், போன் : 432576, 441730 ● வேலூர், போன் : 21902 ● மதுரை, போன் : 33752 ● கும்பகோணம் ● திருநெல்வேலி ● திருச்சி ● பாண்டிச்சேரி, போன் : 31839 ● பெங்களூர் : மல்லேஸ்வரம், போன் : 366433 ● இந்திரா நகர், போன் : 5569397 ● ஹைதராபாத் ● செக்கந்தராபாத், போன் : 819488 ● விஜயவாடா, போன் : 475865 ● மும்பை.

உறுப்பினர்களுக்கு மட்டும்.

AKSHAR

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1996

**முதல் பரிசு ரூ. 1,500**

**இரண்டாவது பரிசு ரூ. 1,000**

**மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ. 1,000**

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 150 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்கு போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால் தலை ஒட்டிய, சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை — 600 097.**

# இங்கிரதஜசு

**விஷ்வக்சேனன்**

## 17. கிருஷ்ணமல்லர் தூது

ஆறு அகழிகளைப் பெற்ற பலமான கோட்டையை உடையது என்பதால் ஆறகழூர் என்று பெயர் பெற்ற கோட்டை; எதிரிகள் நெருங்க இயலாது என்று பெயர் பெற்ற சங்ககிரிக் கோட்டை - இவற்றை விடுத்து ஸ்காந்தபுரத்தை கொங்கு நாட்டின் தலை நகராக ஏன் தேர்ந்தெடுத்தனர் கொங்கு மன்னர்கள் என்ற கேள்விக்கு விடை, ஸ்காந்த புரத்தில் பிரவேசித்த போசளதண்டநாயகன் விக்கலனுக்குப் புரிந்தது.

ஆறடிக்குக் குறையாத அகலத்துடனும் ஆங்காங்கே அமைக்கப்பட்ட அம்புவீசும் பொறிகளுடனும் இருந்தது ஸ்காந்தபுரத்துக் கோட்டை. இரண்டு சுற்றுகளாக நீண்டு வளைந்தன கோட்டை மதில்கள். இரண்டாவது சுற்று மதிலின் வாயில் சற்றுத் தள்ளியே அமைக்கப்பட்டிருந்தது. மதில்களின் இடைவெளியில், சுவர்களிலிருந்த மாடங்களில் தலை நீட்டிக் கொண்டிருந்த பொறிகள் அந்தக் கோட்டையைத் தாக்குவதோ, கைப்பற்றுவதோ அத்தனை எளிதல்ல என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தன.

மதிலின் மீது உலவிய விக்கலன் தன் கூரிய விழிகளைக் கோட்டையின் மீதும் கோட்டையைச் சுற்றியிருந்த பகுதிகளின் மீதும் பாய விட்டான். இடைவிடாத பயிற்சியைக் காட்டியது அவனது திடகாத்திரமான உடலமைப்பு. அதீதமான உயரம். இடையிலிருந்து பாதம் வரை நீண்டு உறையிலிடப்பட்டிருந்த வாள், அவனது ஒவ்வொரு காலடிக்கும் உடலுடன் உரசி தட்தட்டென்று ஒலியெழுப்பியது. விக்கலனின் பின்னால் அசாத்தியப் பணிவுடன் நடந்த போசள உபதலைவன், கொங்கு நாட்டின் நிலைமையையும், சோழ நாட்டிலிருந்த போசளரை சேமகேசி அழைத்து வரச் சென்றதையும், மருத்துவர் இல்லத்திற்கு மயக்க நிலையில் எடுத்துச் செல்லப்பட்ட இளவரசி மாயமாகி விட்டதையும் கூறிக் கொண்



டிருந்தான்.

போசள உபதலைவனாகவும், கோட்டைத் தலைவனாகவும் பணியாற்றிய அந்த வீரனை ஏறிட்ட விக்கலனின் கூரிய அறிவில் கேள்விகள் பல எழுந்தன.

"உபதலைவரே" என்று அழைத்த விக்கலனின் குரலிலும் சந்தேகம் தொனித்தது.

"உத்தரவிடுங்கள் படைத்தலைவரே!" என்று வணங்கிய உபதலைவனின் குரலில் பணிவு நிரம்பியிருந்தது.

"சோழ நாட்டில் நமது வீரர்கள் எத்தனை பேரிருக்கிறார்கள்?"

"மூவாயிரம் வீரர்கள் பிரபு."

"சோழ வீரர்கள் எத்தனை பேர்?"

"ஆயிரத்துக்கும் குறைவுதான் பிரபு. அதுவும் அரண்மனைக்குள் மட்டும்தானிருக்கிறார்கள்."

"சோழர் பெரும்படையின் மற்ற வீரர்கள் என்ன ஆனார்கள்?" விக்கலனின் இந்தக் கேள்வி உபதலைவனை விழிக்க வைத்தது.

"தெரியவில்லை பிரபு."

"சரி போகட்டும். இங்கு விடுதலைப் படையொன்று இருப்பதாகக் கூறினார்களே, அதைப் பற்றிய விவரம் தெரியுமா?"

"அதன் எண்ணிக்கை விவரம் தெரியாது பிரபு. ஆனால் இங்கு சுற்றுப்புறங்களில்தான் அவர்கள் உலவுவதாக நமது வீரர்கள் தெரிவித்திருக்கிறார்கள்."

"சரி, பாண்டியரின் படைபலம் தெரியுமா?"

"தெரியும் பிர்பு. உத்தமபாளையத்தில் கிருஷ்ணமல்லரிடம் மட்டும் பத்தாயிரம் வீரர்களிருக்கிறார்கள். அவரது சீடர்களான மல்லர்களைக் கொண்ட தனிப்படையொன்றும் இருக்கிறது."

விக்கலன் இலேசாக நகைத்தான். நகைப்பினூடே, "இப்பொழுது புரிகிறதா உமக்கு?" என்று கேட்கவும் செய்தான்.

"புரியவில்லை பிரபு."

"உபதலைவரே, சோழர்களின் பெரும்படை எங்கும் கரைந்து போய் விடவில்லை. அது பாண்டியர் படையுடனும், இங்கு விடுதலைப் படையுடனும் கலந்திருக்கிறது. இடைப்பாடி நாட்டிலேயே அந்த சினனுடன் காலம் கழித்ததால் சிங்கணன் இதைப் பற்றி அறியவில்லை. சரி, இங்கு நமது வீரர்கள் எத்தனை பேர்?"

விக்கலனின் விளக்கம் உபதலைவனின் சித்தத்தை உறைய வைத்து விட்டதால் சற்றுக் கழித்தே அவனிடமிருந்து பதில் வந்தது : "நமது படையில் பதினைந்தாயிரம் பேர் இருக்கிறார்கள், படைத் தலைவரே!"

உபதலைவனை நோக்கித் தனது கூரிய விழிகளைத் திருப்பிய விக்கலன், "நமது வீரர்களுடன் மன்னர் அவந்தரின் வீரர்களும் அரண்மனையிலும் கோட்டையிலும் கலந்திருக்கிறார்கள் அல்லவா?" என்றான்.

"ஆம் பிரபு. பல ஆண்டுகளாகக் கோட்டைப் பாதுகாப்பிலும் அரண்மனையிலும் நம்முடன் சேர்ந்தே அவர்கள் பணிபுரிகிறார்கள்" என்ற உபதலைவனின் முகத்தில் குழப்பமிருந்தது.

"உபதலைவரே, இடைப்பாடி நாட்டிலிருந்து அந்த சினன் தப்பி விட்டான். ஸ்காந்தபுரத்திற்கு வந்த இளவரசியும் பிறகு மறைந்து விட்டாள். காரணம் புரிகிறதா உமக்கு?"

விக்கலனின் கேள்வி உபதலைவனை இன்னும் குழப்பியது. அவன் பதிலேதும் கூறவில்லை.

விக்கலன் தொடர்ந்தான்: "கோட்டைக்குள் எதிரிகளுக்கு உதவக்கூடிய வீரர்கள் இருக்க வேண்டும் உபதலைவரே!" என்ற விக்கலன், "நமது படையில் போசள வீரர்களைத் தவிர்த்து மற்ற அனைவரையும் பிரித்துச் சிறையில் அடைத்து விடுங்கள்" என்றும் உத்தரவிட்டான்.

விக்கலன் உத்தரவைக் கேட்ட உபதலைவன் திகைத்தான். "பிரபு! இது புரட்சியை நாமே தொடங்கி வைப்பதாக ஆகிவிடும். வேண்டாம் படைத்தலைவரே, வேண்டாம்!"

விக்கலன் மீண்டும் நகைத்தான். "உபதலைவரே, புரட்சி எப்படியும் வெடிக்கப் போகிறது. அது தொடங்கியபின் இங்கிருக்கும் மற்ற வீரர்களை அடக்க முயல்வது அறிவீனம். வந்த பின்பு திணறுவதை விட வருமுன் காப்பது மேல். நான் கூறுவதை உடனடியாகச் செய்து விடுங்கள்."

விக்கலனின் உத்தரவு திடமாக வந்ததைக் கண்ட உபதலைவன், அதை நிறைவேற்றத் திரும்பி நடந்தான்.

அன்று மாலைக்குள் சோழ எல்லையில் சேமகேசி மாண்ட செய்தியும் கிருஷ்ணமல்லர் உத்தமபாளையத்திலிருந்து படைகளுடன் கிளம்பி விட்ட செய்தியும் கிடைத்தது விக்கலனுக்கு. நடுநிசிக்குப் பிறகு கொங்கு நாட்டின் தென் எல்லையில் நறையூர் நாட்டை கிருஷ்ணமல்லர் கைப்பற்றி விட்டதாகவும், கோட்டைக்குள்ளிருந்த வீரர்கள், அவருக்கு உதவியாக கோட்டைக் கதவுகளைத் திறந்து விட்டதாகவும் செய்தி வந்தது அவனுக்கு.

கிருஷ்ணமல்லரின் அடுத்த இலக்கு ஸ்காந்தபுரம்தான் என்பதை ஊகித்தவன், அப்பொழுதே எழுந்து கோட்டை மதில்களின் மீதிருந்த பொறிகளைச் சோதித்து, காவலையும் பலப்படுத்தினான். இரண்டாவது சுற்று மதிலின் வாசலில் இரண்டு அகர யவனப் பொறிகளையும் நிறுத்தினான்.

நறையூர் நாட்டிலிருந்து ஸ்காந்தபுரம் வரை நீண்ட பெருவழிச்சாலை, ஆழம் அதிகமற்ற

இடத்தில் அமராவதி நதியைக் கடக்கக் கூடும் என்பதை யூகித்தவன், எஞ்சிய போசள வீரர்களுடன் முன்னதாகவே அங்கு கிருஷ்ணமல்லரை எதிர்கொள்ளத் தீர்மானித்தான்.

நதிக்கரையில் வில்லேந்திய வீரர்களை நான்கு வரிசைகளாக நிறுத்தியவன், எதிர்க் கரையில் பாண்டிய வீரர் நதியில் இறங்கு முன்பாக அம்புகளைப் பொழிய வேண்டும் என்றும் உத்தரவிட்டான். நதியைக் கடந்து வருபவர்களைத் தாக்க வீரர்களை இரு பிரிவாகப் பிரித்து, அணிவகுத்து நிற்க வைத்தான்.

கருக்கல் முடியும் நேரத்தில் கோட்டையிலிருந்து வீரன் ஒருவன் ஓடிவந்தான். சிறைக்குள் அடைபட்ட வீரர்கள் கலகம் செய்வதாகவும் சிறைக் கதவுகளைப் பெயர்க்க முயல்வதாகவும் தெரிவித்த அந்த வீரனை ஏறிட்ட விக்கலன், "வீரனே, அடைபட்ட முப்பது நாழிகை கழித்து வீரர்கள் கலகம் செய்வதற்குக் காரணமிருக்க வேண்டும். நமது கவனத்தை திசை திருப்பும் முயற்சி இது. உபதலைவரை கவனித்துக் கொள்ளச் சொல். விடிந்ததும் பாண்டியர் படை வரலாம்" என்றான்.

விக்கலன் எதிர்பார்த்தபடி கதிரவன் ஒளி பரவ முற்பட்ட நேரத்தில் தெற்கில் பெரும் புழுதிப் படலம் எழுந்து, பாண்டியர் படையின் வருகையை அறிவித்தது. புரவிப் படையை முன்னால் அணிவகுக்கவும் நதிக்கரையில் விற்களுடன் நின்ற வீரர்களை சித்தமாகும்படியும் உத்தரவிட்ட விக்கலன், போருக்கான கவசங்களையும் இடையில் தனது நீண்ட வாளையும் தரித்து நதிக் கரையில் நின்றான்.

ஆனால் பாண்டியர் படை அத்தனை துரிதமாக வருவதாகத் தெரியவில்லை. எழுந்த புழுதி மண்டலமும் மென்ன அடங்கியது. கதிரவன் உதித்து ஒரு ஜாமம் கழித்து, பாண்டியரின் பெரும் கொடியை ஏந்திய புரவி வீரன் ஒருவன் முன்னால் வர, பின்தொடர்ந்து ஆஜானுபாகுவான ஒரு மனிதர் வருவது புலப்பட்டது. அந்த மனிதர் அமர்ந்து வந்த பெரும் அரபுப் புரவி, விக்கலனின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தது. ஆஸ்திகந்தம், தௌரிகம் என்று புரவி இலக்கண நூல்கள் வர்ணிக்கும் வேகம் அதிகமற்ற சமத்கார நடையுடன் நிதானமாக வந்த அந்தப் புரவி, அதிகம் பழகாத முரட்டுப் புரவியென்பதும் அந்த ஆஜானுபாகுவான மனிதரின் அசுரபலத்தில் அதன் முரட்டுத்தனம் கட்டுப்பட்டிருப்பதும் புரிந்தது அவனுக்கு.



## அருள்வாக்கு

நிர்வாஹம் பண்ணுவதற்கு ஒரு தகுதி வேண்டுமென்பது போலவே, ஒருத்தர் அப்படிப்பட்ட தகுதிகள் உள்ளவர்தானா என்று எடை போட்டுப் பார்த்து அவரைத் தேர்ந்தெடுப்பதற்கும் ஒரு தகுதி வேண்டும். ஒரு அபேக்ஷகர் (வேட்பாளர்) என்றால் அவர் ஏதோ ஒரு கட்சியில் இருப்பார்; அதற்கென்று கொள்கைகள் இருக்கும். ஸ்வயேச்சை அபேக்ஷகர் என்றால் அவருக்கும் ஏதோ கொள்கைகள் இருக்கத்தான் வேண்டும். தேர்ந்தெடுக்கிறவர்கள் இந்தக் கொள்கைகளைப் புரிந்து கொள்ளக் கூடியவர்களாக இருக்க வேண்டும்; 'நம் தேசத்தில் தற்போதுள்ள நிலவரங்களில் இந்தக் கொள்கைகளின் அடிப்படையில் நிர்வாஹம் செய்வது நல்லதா?' என்று சீர்தூக்கி முடிவு பண்ணக் கூடியவர்களாக வோட்டர்கள் இருக்க வேண்டும். "அதைச் செய்கிறேன், இதைச் செய்கிறேன்" என்று எதையாவது சொல்லிக்கொண்டு வோட்டு கேட்டால், "அது ஸாத்யந்தானா? ஸாத்யமானாலும் அப்படிச் செய்யலாமா?" என்று யோசித்துப் பார்த்து, பேச்சில் ஏமாந்து போகாமல் வோட் போடக் கூடியவர்களாக இருக்க வேண்டும். மொத்தத்தில், குடியரசு எல்லாருக்குமானாலும், அதிலே ராஜாங்கம் அமைப்பவர்கள் எல்லா வர்க்கத்தினருக்கும் ப்ரதிநிதிகளாயிருக்க வேண்டியவர்களானாலும், அவர்களுக்கு நிர்வாஹத்துக்கான யோக்யதாம்சம் இருக்க வேண்டியிருக்கிறது; அப்படிப்பட்ட யோக்யதாம்சம் அவர்களுக்கு இருக்கிறதா என்று பரிசீலனை பண்ணி, அவர்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் ஒரு யோக்யதாம்சம் வேண்டியிருக்கிறது. அதாவது அபேக்ஷகர், வோட் போடுபவர் இருவருக்கும் யோக்யதாம்சம் வேண்டியிருக்கிறது.

ஒரு வேலை கொடுக்கும்போது, மனுப் போட்ட பல பேரிலே யாருக்குக் கொடுக்கலாம் என்று ஸெலக்ட் செய்ய வேண்டியிருக்கிறது. ரொம்பவும் விஷயம் தெரிந்தவர்களைத்தான் ஸெலக்‌ஷன் கமிட்டியில் போட்டு, அவர்கள் மூலம் மனுப் போட்ட பல பேரில் ஒருத்தருக்கு வேலை கொடுக்கிறார்கள். அதாவது வேலைக்கு வைக்கிறவனின் யோக்யதாம்சத்தைப் பரீக்ஷித்து அவனை ஸெலக்ட் செய்வதற்கு அவனைவிட யோக்யதாம்சம் வாய்ந்தவரை நாட வேண்டியிருக்கிறது. குடியரசுத் தேர்தலில் அந்த அளவுக்கு இல்லாவிட்டாலும், இன்னாருக்கு இன்ன யோக்யதாம்சம் என்று சீர்தூக்கிப் பார்க்கவேண்டியவர்களான வோட்டர்களுக்கும் ஓரளவுக்கு யோக்யதை வேண்டித்தான் இருக்கும்.

தேச நிர்வாஹம், அரசியல் கொள்கைகள் முதலியவற்றைப் பற்றி ஓரளவேனும் விஷயஞானமுள்ளவர்கள் ஆலோசனை செய்து வோட் கொடுத்தால்தான் ஆட்சி ஸரியானவர்களிடம் போகும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**



**"தலைவர் காலில் விழுந்து வணங்கா தன்மானத் தமிழ்த் தொண்டன் நான் ஒருவன்தான் என்பதை ஒப்புக் கொள்வீர்களா?"**

வரிசையாக வில்லேந்தி நின்ற வீரர்களையும் இரு பிரிவாக அணிவகுத்து நின்ற புரவிப் படையையும் கவனித்த அந்த மனிதரின் யானை விழிகள் பளிச்சிட்டன. அவர் முகத்தில் முறுவலொன்றும் படர்ந்தது. பாண்டியர் கொடியுடன் உடன் வந்த வீரனை அக்கரையில் நிறுத்தியவர், தனித்து நதியிறங்கிக் கடந்து விக்கலனை நோக்கி வெகு நிதானமாகப் புரவியை நடத்தினார்.

சர்வ அலட்சியமாகத் தமது வீரர்களை ஊடுருவிய அந்த மனிதரின் ஆஜானுபாகுவான தோற்றத்தையும் அவர் இதழ்களில் படர்ந்திருந்த முறுவலையும் கவனித்த விக்கலன், அவர் சாதாரண வீரர் அல்ல என்பதைப் புரிந்து கொண்டான். போசள வீரர்கள் முகத்தில் படர்ந்த திகிலும் அதை உறுதிசெய்தது. புரவியை விட்டிறங்கி நிதானமாக நடந்து விக்கலனை நெருங்கிய அந்த மனிதரின் முறுவல் இன்னும் சற்று விரிந்தது. "போசள தண்டநாயகர் விக்கலனைச் சந்தித்ததில் மகிழ்ச்சி" என்ற சொற்கள் அவரிடமிருந்து உதிர்ந்தன.

சர்வசாதாரணமாகத் தன்னைப் பெயரிட்டு அழைத்த அந்த மனிதரை நோக்கிய விக்கலன், "தாங்கள்..." என்று இழுத்தான்.

"நான் ஜடாவர்ம சுந்தர பாண்டியரின் தூதன். பெயர் கிருஷ்ணமல்லன்" என்று பதில் வந்தது அந்த மனிதரிடமிருந்து.

**ப**ண்டிதனை இன்னொரு பண்டிதனும், ஞானியை மற்றொரு ஞானியும், வீரனை மற்றொரு சுத்த வீரனும், சந்திக்கும் போது ஏற்படும் மகிழ்ச்சியே அலாதியானது; அது ஏற்படுத்தும் மனநிறைவுக்கு இணை ஏதும் கிடையாது என்று ஒரு தமிழ் சிற்றிலக்கியப் பாடல் கூறுகிறது.

வயது இன்னதென்று நிர்ணயிக்க இயலாமல் செக்கச் செவேலென்று உறுதியுடன் விரிந்து கிடந்த மார்பையும், ஆஜானுபாகு என்ற சொல்லுக்கு சரியான பொருளைக் காட்டிய முழங்கால் வரை நீண்ட வாகனவாரைப் போன்ற கரங்களையும், பளிச் பளிச்சென்று யானையின் விழிகளைப் போல் மின்னிய சிறு கண்களின் கூர்மையையும் பார்த்தான் விக்கலன். எதிரிகளின் பாசறைக்குள் நுழைந்த போதும் கிருஷ்ணமல்லரின் கண்களில் தெரிந்த நிதானத்தைக் கவனித்தான். 'இவர் வடநாட்டு மல்லர்களையெல்லாம் வென்று ஆரியசக்கரவர்த்தியென்று பெயரெடுத்ததற்குத் தகுந்த காரணமிருக்கிறது' என்று தீர்மானித்தான்.

"ஆரியச் சக்கரவர்த்தியைச் சந்தித்தது என் பாக்கியம்" என்று அவரை வணங்கியவன், "வாருங்கள், அந்த கூடாரத்தினுள் சென்று அமர்ந்து பேசலாம்" என்று முன்னால் நடந்தான். உள்ளே நுழைந்தவன், தனது ஆயுதங்களையும் கவசங்களையும் வைக்கும் பெரும் மரப் பேழையின் மீது பட்டுத் துணியொன்றை விரித்து, "இப்படி அமருங்கள்" என்று கூறினான்.

சிங்கணனுக்கும் விக்கலனுக்கும் இருந்த வேறுபாட்டைக் கவனித்த கிருஷ்ணமல்லர், காரியத்தைச் சாதிக்க மனிதர்களையோ, நெறிகளையோ மதிக்காத சிங்கணனை விட, எதிரியாயிருந்தாலும் வீரத்திற்கு மதிப்பளிக்கும் விக்கலன் சுத்த வீரன் என்பதைப் புரிந்து கொண்டார். அவரது உறுதியான இதழ்களில் ஸ்திரமான முறுவலொன்று படர்ந்தது.

எதிரே நின்ற விக்கலனின் முகத்தில் லேசான சந்தேகச் சாயை பரவியிருந்தது. அவனிடமிருந்து எழுந்த முதற்கேள்வியிலும் அது பிரதிபலித்தது. "படைத் தலைவரே, தூது வர எத்தனையோ வீரர்களிருக்க, தாங்களே தூதுவராக வந்த காரணம் எனக்கு விளங்கவில்லை. மேலும், சோழ எல்லையில் போசள வீரர்களை எந்த முன்னறிவிப்புமின்றித் தாக்கி அழித்த பாண்டியர், இப்போது மட்டும் தூது வந்திருப்பதன் பொருளும் விளங்கவில்லை" என்றான் விக்கலன்.

கிருஷ்ணமல்லரின் பதில் நிதானமாக வந்தது : "காரணங்கள் இரண்டு விக்கலா!"

"இரண்டு காரணங்களா" – விக்கலனின் குரலிலிருந்த சந்தேகம் வியப்பாக மாறி ஒலித்தது.

காரணங்களை விளக்கினார் கிருஷ்ணமல்லர். அவர் விளக்க விளக்க, பாண்டியர் நீதி எத்தகையது என்பதை அறிந்து கொண்டான் விக்கலன். அதுமட்டுமின்றி, போசளர்கள் இனி தமிழகத்தில் தலையெடுக்காதிருக்க அவர் திட்டம் வகுத்து நீண்ட காலமாகி விட்டது என்பதையும், தான் இனி உயிருடன் போசள நாட்டுக்குத் திரும்புவது இயலாது என்பதையும் திட்டவட்டமாகப் புரிந்து கொண்டான்.

(தொடரும்)

சிறுகதை

ஒரு குழந்தையை விட மோசமாக அழுது கொண்டிருந்தான், விஜய்.

என்ன சொல்லி நிறுத்துவது என்று எனக்குப் புரிபடவில்லை அழட்டும். அழுது அவனாகவே ஓயட்டும்.

எதிரே பரந்திருந்த கடல் அலைகளோடு அதன் அளவில் முரடாய் பயங்கரமாய்த் தெரிந்தது.

"நான் முரடா... அனு?" என்றான்.

பாதி வார்த்தைகள் காற்றாக வெளிப்பட்டன.

என்ன சொல்ல இதற்கு? தோற்றத்தில் பெரும்பாலும் ஆண்கள் முரடர்களாய், தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளும் சுயநலமிகளாய்... பெண் மனசு புரியாதவர்களாய்... 'ஐ கேர் ஃபார் யூ' என்றால் தடாலென அழுது விடுபவர்களாய்... முரண்பாடுகளின் கலவை.

இவன் மட்டும் இல்லை. இதற்கு முன் மனோகர், சந்திரன், விக்டர்...

"உன்கிட்டே பேசணும் அனு. கொஞ்சம் பர்சனலா..."

இப்படித்தான் ஆரம்பிக்கும்.

பிளஸ் டூவில் பாவாடை, தாவணியிலும் சுரிதாரிலும் சில சமயங்களில் அக்காவின் புடவைகளோடும் உலா வந்த எனக்கு இந்த மாதிரி அணுகல்கள் எந்த ஆச்சர்யமும் தரவில்லை.

"என்ன..." என்பேன் பெரிய மனுஷி போல.




"உனக்கே தெரியும். படிப்பு சுமார்னு. பெயிட்டாலே வீரிடுவேன்னு அப்பா மிரட்டியிருக்காரு."

இதே விக்டர் என்னை எப்படி கலாட்டா செய்திருக்கிறான்!

"நாங்க கறி சாப்பிடற ஆசாமிங்க. உடம்பு வலு எப்படி இருக்கும் தெரியுமா?"

முண்டா மடக்கிக் காட்டினான். நான் அதிராமல் நிற்கவும், உள்ளுக்குள் தடுமாறினான்.

"சரி... நான் போகட்டுமா?" என்று சாதாரணமாய்க் கேட்கவும் திகைப்புடன் வழி விட்டவன்.

"அவ என்ன... பெரிய ராங்கிக்காரியா..." என்றானாம். அதுவும் எனக்கு வந்து விட்டது.

இன்று யோசனைகளை யாசிக்கிறவனாய் என் எதிரே.

"விக்டர்... நான் என்ன செய்யணும்?" என்றேன்.

"படிச்சா புரியலே... அனு..."

"வீட்டுல வேற யாரும் உதவ மாட்டாங்களா?"

"அப்பா பிசினஸ்... அம்மா மக்கு... எதனாச்சும் கேட்டா... 'தேவனே, இவனைப் போய் எனக்குக் கொடுத்திரே'ன்னு அழுவாங்க..."

"வேணாம் விக்டர். பெரியவங்களை ரொம்ப சுலபமாய் கேலி செய்து விடலாம். நாமும் பின்னாளில் கேலி செய்யப்படுவோம்" என்றேன்.

தாவணி மடிப்பை நீவி விட்டேன். என் வயசுக்கு வளர்ச்சி கூடுதல்தான். கறுப்பு தாவணி. மஞ்சளில் பாவாடை.

"சரி. என் வீட்டுக்கு வா. நான் சொல்லித் தருகிறேன்."

அவன் எதிர்பார்த்திராத மார்க்குகளுடன் பாஸ் செய்ததும் சர்ச்சில் அவன் கல்யாணம் பார்த்ததும் வேறு கதை.

"யாருடி அது?" என்ற அம்மாவின் அதட்டலுக்கு, அப்பா பதில் சொல்லி அடக்கியது தான் விசேஷம்.

"எம் பொண்ணை எனக்குத் தெரியும்."

அதனால்தானோ என்னவோ, பிறகு மனோகர்... சந்திரன்... என்னை வெவ்வேறு நோக்கங்களில் அணுகிய போது பதறாமல் இருக்கேன்.

அதுவும் மனோகர் சொல்லியே காட்டி விட்டான்.

"நீ பெண்ணே இல்லை, அனு!"

"என்ன சொல்கிறாய்?"

"சராசரிப் பெண்ணை விடவும் வேறுபட்டு நிற்கிறாய்... உனக்குள் தெளிவு இருக்கிறது. வீணாக வெட்கப்படுவதில்லை. பிரச்னைகளை மூன்றாம் மனுஷியாய் அலசுகிறாய். பதிலை ஏற்கிறேனோ இல்லையோ, உன் நேர்மையான



அலைசலை என்னால் சந்தேகிக்க முடிவதில்லை..."

"அப்படியா..." என்றேன் நிமிர்ந்து.

"ச்சீய்.. மனசு எப்போதும் முகமூடிக்குள் இருப்பதில்லை. இருக்கவும் முடியாது. சில நேரங்களில் உன்னை நான் காதலிக்கிறேனோ என்று கூடப் பயப்படுகிறேன்."

"காதலென்றால் பயமா?"

"ம்... ஒரு வகையில்" என்றாள்.

"என்ன பயம்?"

"உன்னை எனக்கே உரியவளாய் என் மனம் தீர்மானித்து விடும். பிறகு இன்றைய அமைதி பறிபோய் அலைக்கழிய ஆரம்பிப் பேன். ஒருநாள் உன்னைப் பார்க்காமல் போனாலும் அனாவசிய அவஸ்தைகள்."

சிரித்தேன்.

"நீயுமா மனோ?"

"இல்லை அனு. இது சகஜம். இயல்பு. இனிப்பைப் பார்த்ததும் எச்சில் ஊறாவிட் டால் அவன் வியாதியஸ்தன். அந்தந்த உணர்வு களை அடக்குவது வேறு. வராமலே போவது என்பது வேறு."

அவனும் ஒருநாள் கல்யாணப் பத்திரிகை கொடுத்தான்.

**ரிஷபன்**

"என்னோட அக்கா பொண்ணு. என் கலர் தான். கோலம் போடும். நோட்டு பூரா போட்டு வச்சிருக்கு. தையல் தெரியும். லேசா சினிமா பாட்டு. நல்லா அழும். விஷயம் சொன்னா புரிஞ்சா மாதிரி தலையசைக்கும். மொத்தத்துல எனக்கு விருப்பமான வடிவம்."

"ஆல் த பெஸ்ட்" என்றேன்.

இன்று எதிரே விஜய்.

என் மெமரியில் பதிந்து போன அதே முதல் வரியுடன்.

"உன்னோட பேசணும் அனு.. பர்சனலா."

பீச்சுக்குப் போய் விடலாம் என்றான்.

தனிமை என்று சொல்லிவிட முடியாது. ஆனால் பிறர் கவனம் பதியாத தொலைவு.

இன்றும் காட்டன் புடைவைதான். இதன் வசதி வேறு புடைவைகளில் இல்லை என்று முன்பெல்லாம் வாதம் செய்வேன். சண்டை வரும். இப்போது என் மனசோடு சரி. சந்திரன் தான் அடிக்கடி சொல்வான், இனிப்பான பஞ்சுப் பொதி போல இருக்கிறேனாம், காட்டனில்!

"நான் முரடா... அனு?"

"ஏன் கேட்கறே?"

"சொல்லேன். நான் முரடா?"

"எதைச் சொன்னால் நீ திருப்திப்படுவாய்?"



# உங்களால் முடியாதா?

"கம்ப்யூட்டர் கற்றுக் கொண்டால் உடனே வேலை கிடைக்குமென்று எல்லோரும் சொல்கிறார்களே" என்று ஒரு கம்ப்யூட்டர் இன்ஸ்டிட்யூட்டில் சேர்ந்தேன். பயிற்சி முறை முற்றிலும் இங்கிலீஷிலேயே இருந்ததால் எனக்கு எதுவுமே புரியவில்லை.

"தமிழ் மீடியத்தில் படித்த உன்னால் கம்ப்யூட்டர் பயிற்சி பெற முடியாதுன்னு சொன்னேனே கேட்டியா, உனக்கு ஏன் இந்த வீண் வேலை" என்று எனது உறவினர்களும், தோழிகளும் கிண்டலாகப் பேசினார்கள்.

எடுத்துக் கொண்ட முயற்சியை வெற்றிகரமாக முடித்தே தீரவேண்டும் என்ற உறுதியுடன் விவேகானந்தாவில் சேர்ந்து இங்கிலீஷ் கற்றுக் கொள்ளத் தொடங்கினேன். ஆர்வமும், முயற்சியும் இருந்தால் ஆங்கில மொழியை எளிதாகக் கற்று கொள்ள முடியும் என்பதை விவேகானந்தாவின் முறையான பயிற்சி உறுதி செய்தது.

ஆம்! விவேகானந்தாவின் பயிற்சியின் உதவியால் கம்ப்யூட்டர் பயிற்சியை வெற்றிகரமாக நிறைவு செய்த நான் இப்பொழுது ஒரு நிறுவனத்தில் 'கம்ப்யூட்டர் புரோக்கிராமராகப்' பணியாற்றி வருகிறேன்."

V. Priya
Computer Programmer
Saffron Systems & Services

*கடந்த 15 ஆண்டுகளில் 5 லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் விவேகானந்தாவின் ஆங்கிலப் பயிற்சியில் சேர்ந்து பயனடைந்துள்ளனர். நீங்களும் வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தபால்மூலம் சுலபமாக இங்கிலீஷ் கற்றுக் கொள்ளுங்கள். சரளமாகப் பேசத் தொடங்குங்கள்.*

**நேர்முகப் பயிற்சி மையங்கள்:-** <u>சென்னை:</u> 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17. ★ 18, ராமசாமி தெரு, மேற்கு தாம்பரம், சென்னை-45. ★ 30, மேடவாக்கம் டாங்க் ரோடு, கீழ்பாக்கம், சென்னை-10. <u>திருநெல்வேலி:</u> 16A, திருச்செந்தூர் ரோடு, முருகன் குறிச்சி, திருநெல்வேலி-2. <u>திருச்சி:</u> சோழன் டவர்ஸ், கீழசிந்தாமணி, (E.R. ஸ்கூல் எதிரில்) திருச்சி-2.

என்றேன் சிரிப்புடன்.

"என்னைப் போய் முரடு, புரிந்து கொள்ளாதவன் என்று வனஜா தினம் சண்டை போடுகிறாள்."

அவன் மனைவி. மணமாகி மூன்றே மாதம். மனிதர்கள் எதைச் சுலபமாய்க் கற்றுக் கொள்கிறார்களோ என்னவோ, நேசிப்பு மட்டும் கை வருவதில்லை. சண்டையிடுதல் அதைவிடச் சுலபம்.

வர வர நான் என் வாழ்வில் நிறைய பேருக்குப் பாவமன்னிப்பு வழங்கி விட்ட பிரமை இப்போதெல்லாம் தட்டுகிறது.

இனி அவனை எதுவும் கேட்க வேண்டாம். நேராய்ப் பார்க்கக்கூட வேண்டாம். குமுறி விட்டுத்தான் ஓய்வான்.

ஒவ்வொரு அலையாய் மேலெழும்பி, பாதி கரைக்கு வருமுன்பே கரைந்து போக, ஒரு சில மட்டும் துணிச்சலாய் வந்து கரையைத் தொட்டன. திமிறி எழும்பின. 'ஜெயித்து விட்டதாய்' காற்றில் செய்தி அறிவித்து, பெருமிதமாய்க் கடலோடு இணைந்தன.

"சொல்லு, அனு. நான் என்னதான் செய்யறது?" என்றான்.

திடுக்கிடலுடன் அவனைப் பார்த்தேன். அவனுக்குப் புரியவில்லை. சமாளித்துச் சொன்னேன்.

"பேசினாக் கூட புரியலியா.. விஜய்... இப்ப என்னோட பேசற மாதிரி 'பேசேன்?"

"இல்லே அனு... புரிஞ்சுக்க மாட்டேங்கிறா!"

"பேசியிருக்கியா? முயற்சி பண்ணியா?"

"பயம்மா இருக்கு அனு... ரொம்ப வற்புறுத்தி உட்கார வச்சுப் பேசினா... வம்பு வருமோன்னு.."

பயம். எனக்குச் சிரிப்பு வந்தது.

"என்னோட தைரியமா பேசறே?"

"இல்லே அனு. சில சமயம் உன்கிட்டே கூட எனக்குப் பயம்தான், நீ ஏதாவது சொல்லி விடுவியோன்னு. நீ ஒரு தராசு மாதிரி அனு. பாரபட்சம் இல்லாம, தட்டுல நிக்க வச்சு, சட்டுனு பேசிடுவே! ஆனா, எனக்கு இப்ப அது வேணும்... அதனாலதான்.. தைரியத்தை வரவழைச்சுக்கிட்டு.." என்றான் படபடப்பாய்.

என் புத்திசாலித்தனம்.. நேர்மை.. அணுகுமுறை.. எனக்கொரு கம்பீரம் கொடுத்திருப்பதாய் இதுவரை உணர்ந்தாலும் இன்று வேறு ஒரு பரிமாணம் எனக்கும்!

"போ விஜய். அடிப்படையில் நாம் நேசத்திற்கு ஏங்குபவர்கள். சார்ந்தே பழகியவர்கள். சாதித்து விட்டவர்களுக்குக் கூட மடி தேவைப்படுகிறது.. அட்லீஸ்ட் வாழ்வில் ஒரு முறையாவது... கதறி அழ, ஆசுவாசப்படுத்திக் கொள்ள... மீண்டும் மீண்டும் முயற்சி செய். புரிய வை."

பக்தன் போலப் பிரசாதப் பொட்டலம் ஏந்தி எழுந்து போனான்.

எதிரே கடலுடன் என் விம்மலும் இணைந்து கொண்டது.





# மு.க.விழாவில் ஜேஜே!

கடல் சாட்சியாக சினிமாக்காரர்கள் கலைஞருக்கு விழா எடுத்த ஏப்ரல் 14. கூட்டத்தை எண்ணினால் குறைந்தது லட்சம் தேறும். கழகக் கண்மணிகளும் நட்சத்திர ரசிகர்களும் போட்டி போட்டுக் கொண்டு ஆரவார விசில் அம்புகளால் காதைப் பிளக்க, பயந்து போய், பீச் ரோடில் போக்குவரத்தை நிறுத்தி விட்டார்கள். ஆக, அந்த நெரிசலும் சேர, மு.க.விழாவில் ஜேஜே!

அத்தனை பெரிய கூட்டத்தைச் சமாளிக்க நூற்றுக்கும் குறைவான போலீஸ்காரர்களே வந்திருந்தனர். அவர்களும் வீட்டுச் சமையல் போரடித்து விட்டதாலோ என்னவோ, கடற்கரை ஸ்பெஷல் மிளகாய் பஜ்ஜிக் கடைகளிலும் பட்டாணி சுண்டல் பையன்களையும் முற்றுகை இட்டுவிட, கட்டுப்படுத்த ஆளில்லாமல், தடுப்புக் கட்டைகளையெல்லாம் முறித்துக் கொண்டு ஜனம் பாய, உட்கார்ந்திருந்த வி.ஐ.பி. அப்பாவிகள் சட்னி ஆகி விட்டார்கள்! நிருபர்கள் பகுதியில் பேட்ரியாட், ஸ்கட் போல நாற்காலிகளும் நபர்களும் வந்து விழ, பிழைத்தால் போதும் என்று ஆகிவிட்டது!

அத்தனை பெரிய கூட்டத்தைக் கட்டுப் படுத்த, காவல் துறை அரை செ.மீ. நடவடிக்கை கூட எடுக்காதது வடிகட்டின அலட்சியத்தனம். இத்தனைக்கும் மைக்கில், கோடிதரம் கெஞ்சி, லட்சம் தரம் காலில் விழுந்து கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

''சும்மா நின்னுட்டு வந்தாப் போதும். ஒண்ணும் பெரிசா பண்ண வேணாம்னு எங்களுக்கு உத்தரவு. என்ன செய்ய?'' என்று வெளிப்படையாகவே முணுமுணுத்தார் ஒரு போலீஸ்காரர்.

''போலீஸ் பாதுகாப்பு கிடைக்காவிட்டால் பரவாயில்லை. எங்கள் ஸ்டண்ட் யூனியன் ஆட்கள் பார்த்துக் கொள்வார்கள்'' என்று முன்னதாக நடந்த பத்திரிகையாளர் கூட்டத்தில் விஜயகாந்த் சொல்லியதாகத் தகவல். சொன்னது சரிதான். 'பார்த்துக் கொண்டு'தான் இருந்தார்கள்.

இத்தனை பெரிய கூட்டம் சேர்ந்ததற்கு முக்கிய காரணம், ரஜினி வரப் போகிறார் என்று அநாவசியத்துக்கு யாரோ கிளப்பி விட்டிருந்த வதந்திதான்!

- ஔரங்கசீப்

படங்கள் : யோகா.

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி; பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka